எழுத்துக்கள் கனல்கக்க, கருத்துக்கள்
புதுமை சொட்ட, அர்த்தமற்ற ஆபாசக்
குப்பைகளை அழித்தொழிக்க
ஆர்ப்பரித்து வெளிவருகிறது

# புரட்சி

(வாரப் பதிப்பு)

## ஆரம்பம்: மே கடைசி வாரம்

•

பிரதம ஆசிரியர்:

**மாஜினி**

தனிப் பிரதி விலை அணா ௪

ஆசிரியர் குழாம்

"மழலி" "பூபதி" ஏ. செல்லையா

•

ஏஜென்ஸி விபரங்களுக்கு:

**"புரட்சி" காரியாலயம்**

தபால் பெட்டி 109, மேலமாசி வீதி, மதுரை

**எங்கள்வழி - நேர்மை, நியாயம், [illegible]**

கமலா கோட்னிஸ்
தனது அழகிய மேனியை
லக்ஸ்
டாய்லெட்
சோப்பினால்
பாதுகாத்துக்கொள்கிறார்






சுந்தரவதனி கமலா சொல்வதாவது : '' என் மேனி அழகை லக்ஸ் டாய்லெட் சோப்பினாலேயே காப்பாற்றிக்கொள்கிறேன். சுத்தமானதும் சௌமியமானதுமான இச்சோப்பின் சுறுசுறுப்பான நுரை சருமத்தை சுத்தம் செய்வதுடன், அப்பழுக்கற்றதாகவும் சோபையுடையதாகவும் வைத்துக் கொள்கிறது. மேனி அழகை முக்கியமாகக் கருதும் ஒவ்வொரு மங்கையும் தவறாமல் லக்ஸ் டாய்லெட் சோப் உபயோகிப்பதை ஒரு பழக்கமாகக்கொள்ளவேண்டும்.''

# லக்ஸ் டாய்லெட் சோப்

*சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்!*

LTS. 176-23 TM

ராஜதானி பூராவும்

40 தியேட்டர்களில்

நடைபெறுகிறது....

ஜெமினி

# சந்திரலேகா

டி. ஆர். ராஜகுமாரி.. எம். கே. ராதா.
ரஞ்சன்..... சுந்தரி பாய்..........
என். எஸ். கிருஷ்ணன்.. டி. ஏ. மதுரம்
எல். நாராயண ராவ்.. மற்றும் பல
நூற்றுக்கணக்கான நடிகர்கள் நடித்தது



சென்னையில் வெலிங்டன்.. ஸ்டார்.. கிரௌன் ஆகிய மூன்று தியேட்டர்களிலும்

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7
இதழ் 39 | ஏப்ரல் 25 | சர்வதாரி
சித்திரை 13



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

"தமிழன் என்று சொல்லடா! தலைநிமிர்ந்து நில்லடா!"

என்று நம் நாமக்கல் கவிஞர் முரசு கொட்டினார். தமிழகத்திலும் தமிழ்நாட்டுக்கு வெளியிலும் உள்ள தமிழர்கள் எல்லாரும் சில காலமாகத் தலைநிமிர்ந்து நிற்கத் தொடங்கியிருக்கிறார்கள். "தமிழன் என்றொரு இனமுண்டு" என்று உணரத் தலைப்பட்டிருக்கிறார்கள். இந்த உணர்ச்சியானது உலகில் எந்தெந்தப் பகுதியிலே தமிழன் இருந்தாலும் அவனைத் தமிழ் நாட்டுடன் தொடர்பு கொள்ளச் செய்திருக்கிறது. தமிழ் நாட்டை அடுத்துள்ள பிரதேசங்களில் தமிழர் மிகப் பெரும்பாலோராக இருக்கும் இடங்களில் தமிழ் நாட்டோடு ஐக்கியப்பட வேண்டும் என்ற இச்சையை உண்டாக்கியிருக்கிறது.




இத்தகைய இச்சை திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்துள்ள தமிழ்நாட்டுப் பகுதிகளில் உண்டாகியிருப்பது இயல்பேயாகும். நாஞ்சில் நாடு முதலிய பகுதிகளில் உள்ள தமிழர்கள் சிறந்த கல்வியறிவு பெற்றவர்கள்; உயர்ந்த தமிழ்ப் பண்பாடு உடையவர்கள்; ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளையைப் போன்ற ஒரு கவிமணியை நாஞ்சில் நாடு அளித்திருக்கிறது என்றால், அதிலிருந்து நாஞ்சில் நாட்டுத் தமிழ்ப் பண்பாட்டை நன்கு அறியலாம்.

கன்னியாகுமரி தமிழ்நாட்டின் தெற்கு எல்லை என்பது மூவாயிரம் ஆண்டுக்கு மேலாகச் சரித்திரத்திலும், கதையிலும், கல்வெட்டிலும் ஸ்தாபிதமாகியிருக்கும் உண்மை. கன்னியாகுமரியை அடுத்துள்ள பிரதேசந்தான் நாஞ்சில் நாடு.

நாஞ்சில் நாட்டுத் தமிழர்களின் தமிழ் இன உணர்ச்சியும் தமிழகத்தோடு ஒன்றுபட வேண்டுமென்னும் ஆர்வமும் சில காலமாக உச்ச நிலையை அடைந்திருக்கின்றன. இந்த உணர்ச்சியும் ஆர்வமும் சமீபத்தில் நடைபெற்ற திருவாங்கூர் அரசியல் நிர்ணய சபைத் தேர்தலில் ஐயமற வெளியாயின. திருவாங்கூர் தமிழ்க் காங்கிரஸ் நிறுத்தி வைத்த அபேட்சகர்கள் அனைவரும் மகத்தான வெற்றியடைந்தார்கள். அவர்களுக்கு எதிராகத் திருவாங்கூர் சமஸ்தான காங்கிரஸ் நிறுத்தி வைத்த அபேட்சகர்கள் படுதோல்வியடைந்தார்கள்.

திருவாங்கூர்த் தமிழர் இயக்கத்தின் தனிப்பெரும் தலைவரான ஸ்ரீ. எஸ். நத்தானியல் பி. ஏ. பி. எல். நமது இந்த இதழ் அட்டைப் படத்தில் விளங்குகிறார். ஸ்ரீ நத்தானியல் அவர்களைப் பற்றியும் அவர் தலைமை வகித்து நடத்திவரும் பேரியக்கம் பற்றியும் நமது விசேஷ நிருபர் எழுதிவரும் தொடர் கட்டுரைகளில் விரிவான விவரங்களைக் காணலாம்.

ஸ்ரீ நத்தானியல் அவர்களை வாழ்த்துகிறோம். அவரைத் தலைவராகக் கொண்ட திருவாங்கூர்த் தமிழர் இயக்கம் பூரண வெற்றியடைய வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.



"வங்காளக் குடாக் கடலின் அலைகள் ஹைதராபின் காலைத் தொடும் காலம் வெகு தூரத்தில் இல்லை" என்று இத்திஹாதுல் முஸ்லிமின் சபைத் தலைவரான காஸிம் ரஸ்வி சொல்லுகிறார்.
ஆம், சந்தேகம் என்ன? அந்தக் காலம் வெகு தூரத்தில் இல்லைதான்!
இந்திய சர்க்கார் நடவடிக்கை




1947ம் வருஷ தமாஷ்!
"இந்த வருஷம் நோபல் சமாதானப் பரிசுக்காகச் சிபாரிசு செய்யப்பட்ட 18 பேர்களில் ட்ரூமனும் ஸ்டாலினும் குறிப்பிடத்தக்க-வர்கள்."
-பத்திரிகைச் செய்தி
ட்ரூமன்
ஸ்டாலின்




இந்திய சர்க்கார் ஹைதராபாத் மீது விரைவில் நடவடிக்கை எடுக்காவிட்டால், தானே நடவடிக்கை எடுக்கப் போவதாக ஸ்ரீமதி அருணா ஆஸப் அலி பயமுறுத்துகிறார்.
சோஷலிஸ்ட்
ஹைதராபாத் எல்லை




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார். | இதழ் 39

# என்ன சேதி?

## மந்திரிகளின் பிரயாணம்

சென்ற வாரத்தில் டாக்டர் சி. ஆர். ரெட்டி நம் பிரதம மந்திரி ஓமந்தூர் ரெட்டியாரின் படத்தைத் திறந்து வைத்தார். அச்சமயம் ஓமந்தூரின் குணங்களைப் பாராட்டி ஓர் அரிய பிரசங்கம் செய்தார். அந்த அற்புதமான பிரசங்கத்தில் இரண்டே இரண்டு விஷயங்களை மட்டும் நாம் ஆட்சேபிக்கிறோம். "தற்சமயம் நம் நாட்டை எவ்வளவோ அபாயம் சூழ்ந்திருக்கிறது; இச்சமயம் காங்கிரஸ் மந்திரிகள் மதுவிலக்கில் போய் மாட்டிக் கொள்வானேன்!" என்றார். நாட்டைச் சூழ்ந்திருக்கும் அபாயங்களில் மிகக் கொடியது மதுபானந்தான். மதுபானத்தை ஒழிக்கிறோம் என்று காங்கிரஸ்வாதிகள் வாக்களித்தது அவர்களுக்கு நாட்டில் செல்வாக்கு ஏற்பட்டதின் முக்கிய காரணங்களில் ஒன்று. ஆகையால் மதுவிலக்கை அலட்சியமாகக் கருதுவது தவறு. இன்னொரு விஷயம் மந்திரிகளின் பிரயாணங்களைப் பற்றியது. மந்திரிகள் அடிக்கடி பிரயாணம் செய்வதைப் பிரதம மந்திரி தடுத்திருக்கிறார் என்று பாராட்டிப் பேசினார். இது விஷயத்தில் பிரதம மந்திரியின் கொள்கையும் அதற்கு டாக்டர் சி. ஆர். ரெட்டியின் ஆதரவும் தவறானவை என்று நாம் வற்புறுத்துகிறோம். இரண்டொரு மந்திரிகள் தினம் பொழுது விடிந்தால் தங்கள் சொந்த ஊருக்குப் போய்த் திரும்புவதுண்டு. இது தடை செய்யத் தக்கதே. ஆனால் பொதுவாக மந்திரிகள் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்தால்தான் ஜில்லாக்களின் நிலைமையும் ஜனங்களின் கஷ்ட நஷ்டங்களும் அவர்களுக்கு நன்றாய்த் தெரியும். நேரில் பார்த்து அரைமணியில் உத்தரவு போடக் கூடிய காரியம், அதிகாரிகளின் கடிதப் போக்கு வரவு மூலமாக நடப்பதற்குச் சில சமயம் ஆறுமாதம் ஆகிறது. ஜனங்களுடைய குறைகளைக் கேட்டும் பார்த்தும் தெரிந்து கொள்வதோடு பொதுஜன அபிப்பிராயத்தை அவ்வப்போது அறிந்து கொள்ளவும் மந்திரிகளின் சுற்றுப் பிரயாணம் உதவியாகும். இப்போது மந்திரிகளுக்கு முதல் வகுப்பு ஸீட்டுகள் இரண்டு தரப் படுகின்றன. இரண்டை ஒன்றாகக் குறைக்கலாம். ஆனால் மந்திரிகள் அடிக்கடி அவசியமான போதெல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்து பொது மக்களோடு சம்பந்தம் வைத்துக் கொள்வது மிக அவசியம் என்று நாம் கருதுகிறோம். காலணா மிச்சம் பிடிக்கப் பார்த்து லட்ச லட்சமாக நஷ்டமாகி விடுவதில் அர்த்தமில்லை.

## ஆறுதல் அடையலாம்

இந்தியாவுடன் நூற்றுக் கணக்கான சமஸ்தானங்கள் ஐக்கியமானது பற்றி அந்தச் சமஸ்தானங்களிலுள்ள பிரஜைகள் ஆனந்தம் அடைந்திருக்கிறார்கள். அப்படியிருக்க, புதுக்கோட்டை மகாஜனங்கள் மாத்திரம் மேற்படி சமஸ்தானம் இந்தியாவுடன் ஐக்கியமடைந்ததைக் குறித்து வருந்துவானேன்? அதன் சம்பந்தமாக சமஸ்தானப் பிரதிநிதிகள் கோஷ்டியினர் டில்லிக்குச் சென்று பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜியையும், சமஸ்தானங்களின் நிர்வாக மந்திரி சபையினரையும் கண்டு பேசியிருக்கின்றனர். எனினும் இந்தியாவுடன் ஐக்கியம் அடைந்ததைக் குறித்து அவர்கள் வருந்தவில்லை என்பது, புதுக்கோட்டையின் தனிச் சிறப்புக்குப் பங்கம் வரக்கூடாதென்பதே அவர்களுடைய கோரிக்கை என்பதும் இப்போது தெரிகிறது. புதுக்கோட்டை தனியொரு ஜில்லாவாக இருக்க இந்திய சர்க்கார் இணங்கும் என்று ஒரு செய்தி கூறுவதால், மேற்படி கோஷ்டியினர் அத்துடன் திருப்தியடைந்து எதிர்கால க்ஷேமத்துக்கான காரியங்களில் ஈடுபடுவார்களென்று நம்புகிறோம்.

# சமதர்மமா?
# சர்வ நாசமா?

நாம் சமதர்மத்தில் நம்பிக்கையுள்ளவர்கள்; நாட்டில் சாதி வேற்றுமைகளும் பொருளாதார வேற்றுமைகளும் ஒழிய வேண்டும் என்னும் ஆசை நமக்கு உண்டு; நாட்டில் உற்பத்தியாகும் உணவுப் பொருள்கள், மற்ற வாழ்க்கை வசதிப் பொருள்கள் எல்லாம் தர்ம நியாயமாகவும் சமமாகவும் பங்கிடப்பட வேண்டும் என்று விரும்புகிறோம்; ஏழை—பணக்காரன் என்ற வேற்றுமையும், தொழிலாளி—முதலாளி என்ற வேற்றுமையும் கூடிய சீக்கிரம் ஒழிய வேண்டும் என்று கருதுகிறோம்.

இந்த நோக்கங்களையெல்லாம் நிறைவேற்றுவதற்குச் சரியான சாதனம் எது என்பது கேள்வி. இந்தக் கேள்விக்குப் பதில் மிக முக்கியமானது. ஏனெனில், சாதனம் நிர்ணயமானால்தான் நோக்கம் நிறைவேறுவது சாத்தியமா என்று தீர்மானிக்கலாம். அப்படி நம் நோக்கம் நிறைவேறுவதினால் தேசம் நன்மையடையுமா, தேச மக்கள் சந்தோஷமடைவார்களா என்றும் முடிவு சொல்லலாம்.

சமதர்மத்தை நிலை நாட்டுவதற்கு நாம் நம்புகிற மார்க்கம் சாத்வீக மார்க்கம்; சட்ட பூர்வமான மார்க்கம்; காந்திமகான் உபதேசித்த மார்க்கம்; ஜவாஹர்லால்ஜி கைக்கொண்டிருக்கும் கரடுமுரடு இல்லாத மார்க்கம்.

* * *

சாத்வீக வழியையும் சட்டபூர்வமான சாதனத்தையும் கைக்கொண்டு நாட்டில் சமதர்மத்தை நிலை நாட்டலாம் என்று நாம் நம்புகிறோம்.

ஹிட்லரையும் பலாத்காரத்தையும் கைக்கொண்ட ஜெர்மனி,—உலகிலேயே மகா பராக்கிரமசாலிகளான வீர மக்கள் வாழும் ஜெர்மனி,—இன்று சுதந்திரம் இழந்து, அடிமைப்பட்டு, அன்னியர் காலில் மிதிபட்டு, மூன்று வல்லரசுகளுக்கு மத்தியில் அகப்பட்டுப் பிளவுபட்டுத் தவிக்கிறது.

ஆனால் காந்தி மகாத்மா காட்டிய சாத்வீக மார்க்கத்தைக் கைக்கொண்ட இந்தியா தேசம் ஜெர்மானியரை ஜயித்த மகத்தான பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை வென்று இன்று சுதந்திரம் பெற்றிருக்கிறது. இப்படிக் காணாது கண்ட மாணிக்கத்தை—வாராது வந்த மாமணியைக்—கை நழுவ விடாமல் காப்பாற்ற வேண்டியது நமது முதல் பொறுப்பு ஆகும். இந்தப் பொறுப்புக்குக் கேடு சூழும் முறையில் யார் என்ன செய்தாலும் அது பெருந்தேசத் துரோகம் என்பதில் சந்தேகமில்லை.

* * *

காந்தி மகான் காட்டிய சாத்வீக மார்க்கத்தினால் சுதந்திரம் அடைந்த நாம் அதே மார்க்கத்தைக் கடைப்பிடித்து நாட்டில் சமதர்மத்தை ஏன் நிலை நாட்ட முடியாது?

சாத்வீக முறையில் கிளர்ச்சி செய்து சட்டசபை மூலமாக அவசியமான சட்டங்களைச் செய்து சமதர்மத்தை நிலைநாட்டுவதில் எவ்விதத் தடையும் இருக்கப் போவதில்லை.

இந்தியா தேசத்துக்கு இப்போது தயாராகிக் கொண்டிருக்கும் அரசியல் அமைப்பில்,—கூடிய சீக்கிரத்தில் அமுலுக்கு வரப்போகும் அரசியல் அமைப்பில்,—வயது வந்தவர்களுக்கெல்லாம் வோட்டுரிமை அளிக்கப்படும்.

புதிய சட்டசபைகளுக்கு வோட்டுக் கொடுப்போரில் மிகப் பெரும்பான்மையோர் குடியானவர்களும் தொழிலாளிகளாகவுமே இருந்து தீரவேண்டும்.

அவர்களுக்கு நல்ல முறையில் ஊழியம் செய்து அவர்களுடைய வோட்டைப் பெற்றுத்தான் யாரும் சட்டசபைக்குள் பிரவேசிக்க முடியும்.

அப்படிச் சட்ட சபைக்கு வருகிறவர்கள் சரியான முறையில் சட்டதிட்டங்களைச் செய்து நாட்டில் சமதர்மத்தை ஸ்தாபிப்பதை யார் தடுக்க முடியும்? ஒருவராலும் முடியாது.

இப்போதுள்ள சட்ட சபைகள் பெரும்பாலும் நடுத்தர வகுப்பாரின் வோட்டுக்களைப் பெற்ற அங்கத்தினரைக் கொண்டவை. இப்படிப்பட்ட

சட்டசபைகளிலே கூட ஜமீன்களையும் இனாம்களையும் ஒழிக்கும் மசோதா கொண்டு வரப்பட்டது; மசோதா சட்டமாக நிறைவேறப் போகிறது.

ஜமீன்தார்களைப் பலாத்காரமாகத் தாக்கவோ அப்புறப்படுத்தவோ அவசியம் எதுவும் நேரவில்லை.

பலாத்கார முறையில் ஜமீன்களை அபகரிக்க ஜமீன் குடிகள் பிரயத்தனம் செய்ததாக வைத்துக் கொள்ளலாம். அதன் பயன் என்ன ஆகியிருக்கும்?

ஜமீன்தார்களில் பெரும் பாலோர் கையில் பணம் உள்ளவர்கள்; அவர்கள் பணங் கொடுத்து ஆட்களைத் திரட்டுவார்கள்; அந்த ஆட்கள் குடிகளைத் தாக்குவார்கள்; குடியானவர்களின் பெண்டு பிள்ளைகளைத் தாக்குவார்கள்; குடியானவர்களின் குடிசைகளுக்குத் தீ வைப்பார்கள்.

குடிகளும் சும்மா இருக்க மாட்டார்கள் அல்லவா? அவர்களுக்கும் ஆத்திரம் பொங்கிக் கட்டுமீறிப் போய் விடும். அந்த ஆத்திரத்தில் செய்வது இன்னதென்று தெரியாமல் வயல்களை அழிப்பார்கள்; களஞ்சியங்களுக்கும் வைக்கோற் போர்களுக்கும் தீ வைப்பார்கள்; சிலசமயம் ஜமீன் அரண்மனைக்குள்ளும் புகுவார்கள்.

இதற்கிடையில் நாட்டை ஆளும் அரசாங்கத்தார் சும்மா பார்த்துக் கொண்டிருப்பார்களா? அவர்கள் முதலிலே போலீஸாரையும் பிறகு துருப்புகளையும் அனுப்பும்படி இருக்கும். குழப்பமான சமயங்களில் போலீஸாரையும் துருப்புகளையும் கட்டுக்குள் வைத்திருப்பது சிரமம்.

ஆகவே மொத்த முடிவு என்ன? இருபுறத்திலும் உயிர்ச் சேதம், பொருட் சேதம், பஞ்சம், பட்டினி, துவேஷம், பகைமை, — ஆகியவைதான்.

ஜமீன்தார் எப்படியாவது தப்பித்துக் கொண்டு, அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு, போயே போய்விடுவார்.

ஏழைக் குடியானவர்களின் குடிசைகளிலே வெகுகாலம் ஓலக் குரல் கேட்டுக் கொண்டிருக்கும்.

இந்த விபத்துகள் எல்லாம் ஒன்றுமில்லாமல் ஜமீன்தாரி சட்டமானது எவ்வளவு நல்ல முறையில் ஜமீன் குடிகளின் உரிமைகளை நிலைநாட்டுகிறது!

ஜமீன்தார்களும் அடியோடு நிராசை அடைந்து போகாத வண்ணம் அவர்களுக்கும் ஓரளவு நஷ்டஈடு என்று கொடுத்து நாட்டில் வீண் மனக்கசப்பு வளராமல் தடுக்கிறது.

சிந்தனை செய்யும் சக்தி உள்ளவர்களுக்கும் தேச நன்மையில் அக்கறையுள்ளவர்களுக்கும் மேற் கூறிய ஓர் உதாரணமே போதுமானது. அதிலிருந்து, சாத்வீக முறையிலே சட்டசபைகள் மூலமாகவே எல்லாவித ஏற்றத் தாழ்வுகளையும் போக்கிச் சமதர்மத்தை ஸ்தாபிக்கலாம் என்பதை அவர்கள் அறிந்து கொள்ளலாம்.

ஆனால் துரதிர்ஷ்ட வசமாகச் சமதர்மத்தின் பெயராலும், கம்யூனிஸம், சோஷலிஸம், பொது உடமை முதலிய பெயர்களைச் சொல்லிக் கொண்டும் நமது தாய்நாட்டின் நன்மைக்கு விரோதமான காரியங்களைச் சிலர் செய்துகொண்டிருக்கிறார்கள். அரிதில் கிடைத்த சுதந்திரம் பறிபோவதற்கும் இந்திய மக்கள் சர்வநாசம் அடைவதற்கும் உரிய வழிகளை அவர்கள் கடைப் பிடித்து வருகிறார்கள்.

* * *

எல்லாரிலும் அதிகமாகத் தேசத்துக்குப் பாதகமான காரியங்களைத் தற்சமயம் கம்யூனிஸ்டுகள் செய்து வருவது கண்டு மிக வருந்துகிறோம்.

இந்தியாவில் அன்னிய ஆட்சி நடந்த வரையில் கம்யூனிஸ்டுகளிடம் நமக்கு ஓரளவு அநுதாபம் இருந்தது. ஏழைகளுக்கு அவர்கள் செய்யும் தொண்டைப் பார்த்து வியந்தோம். மகா யுத்தத்தின்போது அவர்கள் பிரிட்டிஷ் சர்க்காரோடு ஒத்துழைத்தது இந்தியாவை ஜப்பானியரிடமிருந்து காப்பாற்றுவதற்காக என்று எண்ணினோம்.

நாம் எண்ணியதும் எதிர்பார்த்ததும் எல்லாம் தவறாய்ப் போய்விட்டதைக் கண்டு வருந்துகிறோம்.

இந்தியா சுதந்திரம் பெற்று ஆறு மாதத்துக்குள்ளே எப்போது கம்யூனிஸ்டுகள் நாடெங்கும் பலாத்காரக் குழப்பத்தை உண்டாக்க முயன்று வருகிறார்களோ, அப்போது அவர்களுடைய தேச பக்தியில் எப்படி நமக்கு நம்பிக்கை இருக்க முடியும்?

அவர்களுக்கு இந்தியா தேசம் முக்கியமல்ல, இந்தியாவின் சுதந்திரம் முக்கியமல்ல, இந்தியாவின் முன்னேற்றம் முக்கியமல்ல,—வேறு எதுவோதான் முக்கியம் என்று இப்போது தெளிவாகத் தெரிந்து வருகிறது.

ருஷியாவின் அயல்நாட்டுக் கொள்கையையே அவர்கள் இங்கே நடத்தி வைக்க முயல்கிறார்கள் என்று சந்தேகிப்பதற்கும் அவர்களுடைய காரியங்கள் இடங் கொடுக்கின்றன.

சமீபகாலத்தில் மலையாளத்திலும், தஞ்சாவூரிலும், கிருஷ்ணா ஜில்லாவிலும் கம்யூனிஸ்ட் கட்சியாரின் ஆதிக்கத்துக் குட்பட்டவர்கள் மிகப் பயங்கரமான பலாத்காரச் செயல்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். பரம சாத்விக சத்யாக்ரஹியான சர்தார் வேதரத்தினத்தைக் கொலை செய்யப் பிரயத்தனப் பட்டிருக்கிறார்கள். தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவரைத் தாக்கி மூர்ச்சை போடும் வரையில் அடித்திருக்கிறார்கள். அமைதி நிலைநாட்ட வந்த போலீஸாரையும் பலாத்காரமாக எதிர்த்துத் தாக்கியிருக்கிறார்கள்.

இந்தக் காரியங்களிலிருந்து கம்யூனிஸ்டுகளுக்கு அஹிம்சையிலும் நம்பிக்கையில்லை, சட்டசபை வோட்டுகளிலும் நம்பிக்கையில்லை என்று நிச்சயமாக ஏற்படுகிறது. குழப்பம் விளைவிப்பதிலும் பலாத்காரத்தைக் கையாளுவதிலுந்தான் அவர்களுக்கு நம்பிக்கை என்று ஏற்படுகிறது.

நல்ல வழி, சாத்விக வழி, சட்டபூர்வமான வழி, — இருக்கும்போது எதற்காக அவர்கள் பலாத்காரத்தில் இறங்க வேண்டும்?

சர்வஜன வோட்டுரிமையின் கீழ் அடுத்த வருஷம் தேர்தல் வரப் போகிறது. அதுவரையில் பொறுத்திருந்து அவர்கள் தேர்தலில் வெற்றி பெறவும் சட்டசபையைக் கைப்பற்றவும் ஏன் முயலக் கூடாது? சட்டசபை மூலம் அவர்களுடைய கொள்கைக் கிணங்க ஏன் சட்டம் நிறைவேற்றக் கூடாது? எதற்காக இப்போது இத்தகைய பயங்கர பலாத்கார முறைகளில் இறங்குகிறார்கள்?

இதற்குத் தக்க காரணம் வெளியாகும் வரையில், "அவர்கள் ருஷிய ஏகாதிபத்தியத்தின் கருவிகள்" என்று சொல்லுவோரின் பேச்சைத்தான் நாம் நம்பவேண்டியதாயிருக்கிறது.

* * *

சமதர்மத்தை ஸ்தாபிக்க முயல்வதாகச் சொல்லிக் கொண்டு பொது மக்களிடையே பிரசாரம் செய்யும் மற்றொரு கட்சி சோஷலிஸ்ட் கட்சியாரும்.

பொதுவாக இவர்கள் ஜவாஹர்லால்ஜியின் சர்க்காரை முதலாளி ஆதிக்கமுள்ள சர்க்கார் என்று குறை சொல்கிறார்கள். தொழிலாளர் வேலை நிறுத்தங்களையும் ஆதரிக்கிறார்கள்.

"இந்தியா அரசியல் சுதந்திரம் பெற்றுவிட்டால் போதுமா? பொருளாதார சுதந்திரம் பெற வேண்டாமா? முதலாளிகள் மேலும் கொள்ளையடிக்கப் பார்த்துக் கொண்டிருக்கலாமா?" என்று பிரசாரம் செய்கிறார்கள்.

இந்தப் பிரசாரத்திலுள்ள அபத்த வாதம் அறிவாளிகளும் தேச பக்தர்களுமான சோஷலிஸ்டுகளுக்குத் தெரியவில்லையென்பது நமக்கு ஆச்சரியம் அளிக்கிறது.

முதலாளிகள் கொள்ளை லாபம் அடிப்பதை விட்டுக் கொண்டிருக்க வேண்டுமென்று யார் சொல்கிறார்கள்? ஜவாஹர்லால்ஜியோ, சர்தார் வல்லபாயோ சொல்லவில்லை. ஸ்ரீ ஆர். கே. சண்முகம் செட்டியார்கூட அவ்வாறு சொல்லவில்லை.

"முதலாளிகளின் கொள்ளை லாபத்தைத் தடுப்பதற்குச் சட்டபூர்வமான முறைகளைக் கையாளுகிறோம்; கையாளப் போகிறோம்" என்று தான் சொல்லுகிறார்கள். ஆனால் "அப்படி எடுக்கும் நடவடிக்கையினால் நாட்டின் பொருள் உற்பத்தி தடைப்படுவதாயிருந்தால் அதற்கு வேண்டிய பந்தோபஸ்துக்களை முதலில் செய்து கொள்ள வேண்டாமா? அதற்கு அவகாசம் கொடுங்கள்" என்று கேட்கிறார்கள்.

இது சோஷலிஸ்டுகளுக்குப் பிடிக்கவில்லை. "அப்படி என்ன பிரமாத பொருள் உற்பத்தி? முதலாளிகளின் கொள்ளை லாபத்தைத் தடுப்பதுதான் முக்கியமான காரியம். தொழிலாளிகளுக்கு அந்தக் கொள்ளை லாபத்தின் பங்கு கிடைப்பது அதைவிட முக்கியமான காரியம். பொருள் உற்பத்தி தடைப்பட்டால் தடைப் படட்டுமே! என்ன முழுகிவிடும்! தொழிலாளிகளின் வேலை நிறுத்த உரிமையை ஒருநாளும் கைவிட முடியாது!" என்று சொல்கிறார்கள்.

ஆகவே பொருள் உற்பத்தி முக்கியமா, லாபப் பிரிவினை முக்கியமா என்பது பிரதான பிரச்னை ஆகிறது.

லாபப் பிரிவினை சரியாக நடப்பதற்காக வேலை நிறுத்தத்தைக் கையாளலாமா என்பது அடுத்தபடி முக்கியமான பிரச்னை ஆகிறது.

இந்த விஷயத்தை முடிவு செய்ய ஓர் உதாரணத்தை எடுத்துக் கொண்டு யோசனை செய்யலாம்.

* * *

கோயமுத்தூர் நூல் ஆலைகளில் மாதக் கணக்காக வேலை நிறுத்தம் நடந்து வருகிறது. சுமார் முப்பதி

ஆயிரம் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்.

இந்த வேலை நிறுத்தங் காரணமாக ஏற்படும் லாப நஷ்டம் என்ன?

நூல் உற்பத்தியும் ஜவுளி உற்பத்தியும் தடைப்பட்டு விட்டது. அவ்வளவுக்குத் தேசம் மகத்தான நஷ்டம் அடைந்திருக்கிறது.

தொழிலாளிகள் ஒரு விதமான லாபத்தையும் அடையவில்லை. மூன்று மாதத்துச் சம்பளத்தை அநியாயமாக இழந்து விட்டிருக்கிறார்கள். தங்களுடைய பெண்டு பிள்ளைகளுக்குப் பெரும் நஷ்டத்தை உண்டு பண்ணியிருக்கிறார்கள்.

குறைந்தபட்சம் சுமார் முப்பது லட்சம் ரூபாய் மொத்தத்தில் தொழிலாளர்களுக்கு நஷ்டமாகியிருப்பதை அறிகிறோம். ஒரு கோடி ரூபாய் பெறுமான நூலும் துணியும் உற்பத்தியாவது தடைப்பட்டுப் போய்விட்டது.

தொழிலாளர்களின் கட்சி நியாயமே ஆனாலும், அவர்கள் வேலை நிறுத்தம் செய்யாமல் வழக்கம்போல் கஷ்டத்துடனாவது வேலை செய்திருந்தார்கள் என்று வைத்துக் கொள்வோம்.

அதனால் என்ன விபரீதம் நேர்ந்திருக்கக் கூடும்?

ஆலை முதலாளிகள் இன்னும் கொஞ்சம் பணம் சேர்த்திருப்பார்கள். பழைய கொள்ளை லாபங்களோடு இன்னும் கொஞ்சம் சேர்ந்திருக்கும்.

ஆனால் ஆலை முதலாளிகளிடம் அதிகப்படியாகச் சேரும் பணத்தைச் சர்க்கார் எடுத்துக்கொள்ள நூற்றெட்டு வழிகள் இருக்கின்றன.

வருமான வரி போட்டு எடுத்துக் கொள்ளலாம்; சொத்து வரி போட்டு எடுத்துக் கொள்ளலாம்; அதிகப்படி லாபத்தைச் சட்டம் போட்டுப் பறிமுதலே செய்து விடலாம்.

எனவே, சுமார் முப்பது நாற்பது முதலாளிகளிடம் அதிகப் பணம் சேர்ந்திருந்தால் அதனால் குடி முழுகிப் போயிராது. அது நிவர்த்தி செய்ய முடியாத நிலைமை அல்ல. ஜமீன்தாரி மசோதாவைப்போல் ஒரு மசோதா கொண்டு வந்து பணக்காரர்களிடம் உள்ள அதிகப்படி பணத்தை யெல்லாம் பொதுஜன சர்க்கார் எடுத்துக் கொள்ள முன் வந்தால் அதை யார் தடை செய்ய முடியும்?

இதற்கு மாறாக, தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்ததினால் தேசத்துக்கும் சமூகத்துக்கும் எவ்வளவு பொருள் உற்பத்தி நஷ்டம் பாருங்கள்! தொழிலாளிகளுக்கு எவ்வளவு சம்பள நஷ்டம்? பொதுஜன வோட்டுப் பெற்ற காங்கிரஸ் சர்க்காருக்கு அதனால் எவ்வளவு தொல்லை?

மூன்று மாத நூல் உற்பத்தியும் துணி உற்பத்தியும் நின்றது நின்றது தான் அல்லவா? இந்த நஷ்டத்துக்குப் பரிகாரமே கிடையாது அல்லவா?

* * *

இந்தியா சுதந்திரம் பெற்று ஒரு வருஷம் ஆகவில்லை. அரும்பாடுபட்டுப் பெற்ற சுதந்திரம் இந்தியாவின் மண்ணில் வேர் இறங்கித் தளிர்விட்டு ஸ்திரப்பட வேண்டும். நாலா புறமும் சூழ்ந்திருக்கும் அபாயங்களிலிருந்து நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு நம் அரும்பெரும் தலைவர்களின் தலையில் சுமந்திருக்கிறது.

இந்த நிலைமையில் எந்தவிதமான வேலை நிறுத்தம் செய்வதும் பிசகாகும். உற்பத்தியைத் தடை செய்யக் கூடிய வேலை நிறுத்தம் எதுவும் தேசத் துரோகம் என்றே சொல்லலாம்.

அதிலும், உணவுப் பொருள் உற்பத்தியைத் தடை செய்வது பஞ்சமா பாதகத்தில் சேர்ந்ததாகும்.

தமிழ் நாட்டிற்குள்ளே தஞ்சாவூர் ஜில்லா ஒன்றிலேதான் தேவைக்கு அதிகமாக நெல் விளைகிறது.

நாளைக்குத் தமிழ் மாகாணம் தனியே பிரிந்து விட்டால், தஞ்சாவூர் ஜில்லா நெல்லைக்கொண்டு தான் மற்ற ஜில்லாக்களில் குறைவாகும் உணவுப் பொருளை இட்டு நிரப்ப வேண்டும்.

அப்படிப்பட்ட ஜில்லாவில்,—தென்னிந்தியாவின் நெல் களஞ்சியத்தில்,—கம்யூனிஸ்டுகள் முதலிய பல கூட்டத்தார் நெல் சாகுபடியைத் தடை செய்யும் முறையில் கிளர்ச்சி நடத்திக் குழப்பம் விளைவித்து வருகிறார்கள்.

ஏழைக் குடியானவர்களையும் ஹரிஜனங்களையும் கூசாமல் பலாத்காரத்தைக் கையாளப் பயிற்சி அளித்தும் பிரசாரம் செய்தும் வருகிறார்கள்.

இது பெரும் தேசத் துரோகம், மகா பாதகம் என்பதில் சந்தேகமில்லை.

சென்னைக் காங்கிரஸ் சர்க்கார் பலவீனத்துக்கு இடங்கொடாமல் தங்கள் கடமையைக் கண்டிப்பாக நிறைவேற்றுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். இப்போது சரியான நடவடிக்கை எடுக்கா விட்டால், பிற்பாடு கையைப் பிசைந்து கொண்டு நிற்க நேரிடலாம் என்று எச்சரிக்கிறோம்.



# புது வருஷப் பரிசு

ராஜாஜி தமிழ்நாட்டுக்குப் புது வருஷப் பரிசாக அளித்துள்ள பாரதியார் படத்தை வரவேற்றுத் திறந்து வைப்பதற்காகச் சென்ற செவ்வாய்க்கிழமை சர்வதாரி வருஷப் பிறப்பன்று மாலை ராஜாஜி மண்டபத்தில் ஒரு விசேஷ வைபவம் நடந்தது.

மண்டபத்தின் உட்புறம் முழுவதும் எள் விழக்கூட இடமின்றிக் கூட்டம் நிறைந்திருந்தது. அதைத் தவிர, மேலே மாடியிலும் கீழே மண்டபத்தைச் சுற்றிலும் உள்ள வராந்தாக்களிலும் வெளி மைதானத்திலும் ஜனங்கள் கூடியிருந்தார்கள். ஏராளமான பெண்களும் குழந்தைகளுங்கூடக் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள்.

வாழை மரங்களாலும் தோரணங்களாலும் மண்டபம் வெகு அழகாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. பாரதியாரின் படம் மேடையின் நடுவில் வைக்கப்பட் டிருந்தது. அழகிய ரோஜாப் பூமாலைகளும் மணமுள்ள மல்லிகைப் பூமாலைகளும் படத்தை அலங்கரித்தன.

கூட்டத்துக்குச் சென்னைப் பிரதம மந்திரி ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் தலைமை வகித்தார். ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் படத்தைத் திறந்து வைத்தார். டாக்டர் ராஜன், ஸ்ரீ பக்தவத்ஸலம், ஸ்ரீ கே. மாதவமேனன், ஸ்ரீ கே. பாலசுப்பிரமண்ய ஐயர், வ. ரா., வி. ஆர். ஸ்ரீநிவாஸன் முதலியோர் பாரதியாரின் மேதையைப் பற்றியும் கவிகளைப் போற்ற வேண்டியதின் அவசியத்தைப் பற்றியும் பேசினார்கள்.

கூட்டத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாரதியார் கீதங்களைப் பாடினார். கூட்டத்தின் முடிவில் "வாழிய செந்தமிழ்" என்னும் கீதம் கோஷ்டி கானமாகப் பாடப்பட்டபோது தலைவர்களும் சபையோரும் ஒருங்கே எழுந்து நின்று தமிழ்த் தாய்க்கு மரியாதை செய்தனர்.

* * * *

ஸ்ரீ ஹரிபத ராய் என்னும் பிரசித்த வங்க நாட்டு ஓவியக் கலைஞரால் தீட்டப் பட்ட மேற்படி பாரதியார் படம் ஒரு வாரம் ராஜாஜி மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்தது. எட்டயபுரம் பாரதி மண்டபத்தில் சித்திரமாகக் காட்சி அளிப்பதற்காக ஏப்ரல் 24-ம் தேதி யன்று எட்டயபுரத்துக்கு அனுப்பப்படுகிறது.

# எத்தனை நாள் இக் கொடுமை?

"பெற்றோன்"

ஆசிரியர்கள், பேராசிரியர்கள், தமிழ் ஆசிரியர்கள், வித்வான்கள், சிரோமணிகள், வெறும் உபாத்தியாயர்கள் ஆகிய இவ்வளவு பேரும் உள்ள இடத்தை யெல்லாம் எண்ணித் தண்டம் சமர்ப்பித்து விட்டு, "தயவு செய்து மன்னிக்கவும்" என்று முன்னதாகவே கேட்டுக் கொண்டு, ஒரே ஒரு விஷயத்தை எடுத்துக் காட்டி விண்ணப்பித்துக் கொள்ள விரும்புகிறேன்.

காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்ட நாளிலிருந்து ஆசிரியர்களும் உபாத்தியாயர்களும் வித்வான்களும் பண்டிதர்களும் "சம்பளம் போதவில்லை!" என்று பெருங் கூக்குரல் போட்டு வந்தார்கள். அவர்களுடைய கோரிக்கையைப் பொது மக்களாகிய நாம் எப்போதும் ஆதரித்தோம்.

"இத்தனை நாள் அன்னிய ஆட்சியிலே நாங்கள் குறைவாகச் சம்பளம் வாங்கிக் கொண்டு கஷ்டப்பட்டோம். சுதந்திரம் வந்த பிறகாவது எங்கள் சம்பளமும் அந்தஸ்தும் உயர வேண்டாமா?" என்றார்கள்.

"ஆமாம், உயர வேண்டியது தான்!" என்று ஆமோதித்தோம்.

"சம்பளம் உயர்த்தா விட்டால் வேலை நிறுத்தம் செய்வோம்!" என்றார்கள்.

"ஏழை ஆசிரியர்களை அந்த அளவுக்குப் போகும்படி விட வேண்டாம்! சம்பளத்தை உடனே உயர்த்துங்கள்!" என்று காங்கிரஸ் மந்திரிமார்களை மன்றாடிக் கேட்டுக் கொண்டோம்.

இந்தியா சுதந்திரம் பெற்றதனால் தங்களுக்குச் சம்பளமும் அந்தஸ்தும் உயர வேண்டும் என்று சொன்ன ஆசிரியர்கள் வேறு ஒரு விஷயத்தில் மட்டும் மௌனம் சாதித்து வந்தது நமக்குப் பெருவியப்பை அளித்தது; இன்னமும் அளித்து வருகிறது.

"இந்தியா சுதந்திரம் அடைந்துவிட்டது; ஆகையால் நமது கல்வி முறை மாற வேண்டும்; பாடத் திட்டங்கள் மாற வேண்டும்" என்று ஆசிரியர்களும் உபாத்தியாயர்களும் சொல்லவில்லை. கூட்டம் போட்டு வற்புறுத்தவில்லை.

"இந்த மாதிரி பாடங்களை இனிமேல் சொல்லிக் கொடுக்க மாட்டோம்; பாடத் திட்டம் மாறாவிட்டால் வேலை நிறுத்தம் செய்வோம்" என்று எந்த ஆசிரியர் சங்கமாவது தீர்மானம் நிறைவேற்றியதா என்றால், கிடையவே கிடையாது!

இது ஏன்?—அயல் நாட்டார் ஏற்படுத்திய கல்வி முறையைப் பயின்று அதிலேயே உழன்று வந்ததினால் நமது ஆசிரியர்—உபாத்தியாயர் கூட்டத்துக்கு அதில் உள்ள குறைகளைத் தெரிந்துகொள்ள முடியாமலே போய்விட்டதா? அல்லது குறைகள் உள்ள அந்தக் கல்வி முறையைத் தங்களுடைய சுயநலத்துக்கு உகந்தது என்று நினைக்கிறார்களா? அல்லது அதைப்பற்றிச் சிந்திப்பதற்கோ முயற்சி எடுப்பதற்கோ வேண்டிய ஊக்கமும் மனோதிடமும் அற்றுச் சோர்வடைந்து போனார்களா?—அவர்கள்தான் சொல்லவேண்டும்.

* * *

டாக்டர் ரவீந்திரநாத தாகூர் கல்வியைப் பற்றிய ஒரு கட்டுரையில் கூறியிருக்கிறார்:—"நம்முடைய கல்வி முறையில் உள்ள தீங்கு நம்மைப் பாதிப்பதோடு போகாது. நம்முடைய புதல்வர்களை அதிகமாகப் பாதிக்கும்; நம்முடைய பேரப் பிள்ளைகளை இன்னும் அதிகமாகப் பாதிக்கும். தலைமுறைக்குத் தலைமுறை அதன் தீய பலன்கள் வளர்ந்து கொண்டே போகும்."

இந்த மகா கவி வாக்கில் அடங்கிய உண்மையைச் சமீபத்தில் நான் பிரத்யட்சமாகக் காணும்படி நேர்ந்தது.

இருபத்தெட்டு வருஷத்துக்கு முன்னால் நான் பள்ளிக்கூடத்துக்குப் போய்க் கொண்டிருந்தேன். அப்போதும் கெட்டிக்காரப் பிள்ளைகளுக்குப் பரிசு வழங்கும் விழாக்கள் பள்ளிக்கூடங்களில் நடப்பதுண்டு. பரிசு பெறும் பிள்ளைகள் அவ்வளவு திடகாத்திரமா யிருக்க மாட்டார்கள்; சுமாராகத்தா னிருப்பார்கள். பரீட்சையில் 'கோட்' அடித்துக் கொண்டு விளையாட்டில் பரிசு பெறுகிற பிள்ளைகள் மட்டும் கொஞ்சம் தேக வலிவுடன் இருப்பார்கள்.

சென்ற 1947-ம் வருஷத்தில் ஒரு ஹைஸ்கூலில் நடந்த பரிசு வழங்கும் வைபவத்துக்குப் போயிருந்தேன். ஒவ்வொரு வகுப்

பிலும் முதலாவதாகவும் இரண்டாவதாகவும் தேறிய பிள்ளைகளைப் பெயர் சொல்லி அழைத்தார்கள். பிள்ளைகள் ஒவ்வொருவராய் மேடைக்கு வந்து பரிசு பெற்றுக் கொண்டு போனார்கள். அவர்களைப் பார்த்த போது எனக்கு ஒரு குரல் அழலாம் என்று தோன்றியது. இருபத்தெட்டு வருஷத்துக்கு முன்னால் நான் பார்த்த பரிசு பெறும் பிள்ளைகளைக் காட்டிலும் இவர்கள் மகா மோசமாயிருந்தார்கள். காற்று அடித்தால் கீழே விழுந்துவிடக் கூடிய அவ்வளவு திடகாத்திரம்! உருவத்தைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. "கல்லிவர்ஸ் ட்ராவல்" என்னும் புத்தகத்தில் வரும் "லில்லிப் புட்டு"கள் போல அங்குஷ்டப் பிரமாணமாயிருந்தார்கள். "ஐயோ! இந்த புத்திசாலிப் பிள்ளைகள்,—பரிசு வாங்கும் பிள்ளைகள்,—இப்படிப்பட்ட தேகத்தை வைத்துக் கொண்டு வாழ்க்கையில் என்ன காரியத்தைச் சாதிக்கப் போகிறார்கள்?" என்று நினைத்து என் நெஞ்சு குமுறியது.

பரிசு பெற்ற சுமார் முப்பது பிள்ளைகளில் ஒரே ஒரு பையன் ஆஜானுபாகுவாயும் திடமானவனாயும் இருந்தான். அவனுடைய பெயர் 'அபு பக்கர்' என்று சொன்னார்கள். அந்தப் பையனுடைய தகப்பனாரும் பாட்டனாரும் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் படித்ததில்லை. அதனால் அவன் அப்படி இருந்தான்! மற்றப் பிள்ளைகள் எல்லாரும் படித்த நடுத்தர வகுப்புக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அதாவது என். ஜி. ஓக்கள், வக்கீல்கள், உபாத்தியாயர்கள் முதலியோரின் பிள்ளைகள். அதனால் அப்படி க்ஷீணித்திருந்தார்கள். இதே கல்வி முறை நீடித்திருக்குமானால் அபுபக்கரின் பேரப் பிள்ளைகளும் க்ஷீணித்துச் சோனிகளாகி விடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

இப்போதுள்ள கல்வி முறையானது அப்படி மக்களின் ஜீவசக்தியை உறிஞ்சி விடுகிறது. அதை அறிந்து கொள்ளும் சக்தி கூட இல்லாத வண்ணம் மூளையையும் பலவீனப்படுத்தி விடுகிறது போலும்!

* * *

ஐம்பது அறுபது வருஷத்துக்கு முன்னால் தென்னாட்டில் ஆங்கிலக் கல்வியின் விளைவாகச் சில தீர புருஷர்களும் மேதாவிகளும் தோன்றினார்கள். உருவத் தோற்றத்திலும் அவர்கள் கம்பீரமாக இருந்தார்கள். ஸர் டி. முத்துசாமி ஐயர், ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயர், ஸர் வி. பாஷ்யமய்யங்கார், ஸர் வி. கிருஷ்ணசாமி ஐயர், ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் முதலியவர்கள் தங்களுடைய மேதையினால் சென்னை மாகாணத்துக்கே கௌரவம் அளித்தார்கள். அப்படிப்பட்டவர் யாரையாவது இந்த நாளில் இந்நாடு பெற்றிருக்கிறதா? இல்லை. ஏன் இல்லை?

நிலத்தை வளப் படுத்துவதற்கு இரண்டு வகை உரங்கள் உண்டு. ஒன்று, இயற்கை அளிக்கும் உரங்கள். மாட்டுச் சாணம், பச்சைத் தழை, பிண்ணாக்கு முதலிய இயற்கை உரங்கள் பூமிக்கு நிரந்தரமான வளத்தை அளித்து தானிய விளைவையும் அதிகப்படுத்துகின்றன.

ஆனால் இன்னொரு வகை உரமான ரசாயனச் செயற்கை உரம்,—அம்மோனியம் ஸல்பேட் முதலியவை,—பூமியிலுள்ள சத்தை யெல்லாம் கொஞ்சம் கூடப் பாக்கியில்லாமல் ஒரேயடியாக இழுத்துப் பயிருக்குக் கொடுக்கின்றன. அந்த வருஷத்துக்குப் பயிர் நன்றாய் வளர்ந்து நல்ல விளைவையும் கொடுக்கிறது. அடுத்த வருஷம் அதே நிலத்தில் அதே ரகமான வித்தைப் போட்டால் பயிர் செழிப்பதில்லை; செழிப்பதற்குப் பதில் காய்ந்து போய்விடுகிறது.

ஆங்கிலேயர் ஏற்படுத்திய கல்வி முறை இந்திய நாட்டுக்கு ரசாயன உரத்தைப் போல் பயன்பட்டிருக்கிறது. அந்தக் கல்வி முறை ஏற்பட்ட புதிதில், அதன் பயனாகச் சில மேதாவிகள் தோன்றினார்கள். அவர்களுடைய கல்வியும் அறிவும் நன்றாகச் சோபித்தன.

ஆனால் நாளாக ஆக, ரசாயன எருவின் தீங்கு வெளியாகத் தொடங்கியது. மேதாவிகள் தோன்றிய இடத்தில் மந்த புத்தியானர் தோன்றினார்கள். தேக திடத்தைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. அந்தப் பெரியோர்களின் கம்பீரமான தோற்றத்தையும் இப்போது பி.ஏ. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறும் பிள்ளைகளின் க்ஷீண தேகத்தையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

முகத்தில் கண் உள்ளவர்கள் எல்லாரும் நன்றாய்ப் பாருங்கள். பார்த்தால், அயல் நாட்டுக் கல்வி முறை நம்முடைய இந்திய ஜாதிக்கு எவ்வளவு மகத்தான தீங்கைச் செய்திருக்கிறது, எப்படி இந்திய ஜாதியின் க்ஷீணத்துக்கே அது காரணமாகி வந்திருக்கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்.

* * *

பழைய காலத்தில் சரித்திரத்தை விசேஷ பாடமாய் எடுத்துக்கொண்ட மாண

வர்கள் இங்கிலாந்து சரித்திரம் வாசிக்க வேண்டியிருந்தது. எந்த இங்கிலீஷ் அரசன் எந்த வருஷத்தில் பிறந்தான், எந்த வருஷத்தில் செத்தான் என்று தேதிகளை உருப்போட வேண்டியிருந்தது. வேண்டாத விஷயந்தான். ஆனாலும் பிரிட்டிஷார் இந்தியாவை அரசாண்டு வந்தபடியால், ஆங்கிலேயர் சரித்திரத்தை நாம் படித்துத் தொலைக்க வேண்டியிருந்தது.

ஆனால் சுதந்திரம் வந்த பிறகும் அதே நிலைமை ஏன் நீடித்திருக்கவேண்டும்? இந்த வருஷத்து ஐந்தாவது பாரப் பரீட்சைக் கேள்விகள் சிலவற்றைக் கேளுங்கள் :—

1. பழைய குடியேற்றக் கொள்கை முறை என்றால் என்ன?

2. பென்னித் தபால் யாரால் புகுத்தப் பட்டது?

3. தொழிற் புரட்சியால் ஏற்பட்ட முடிவான விளைவுகள் யாவை?

4. 1832-ம் வருஷத்தில் செய்த சீர்திருத்தச் சட்டத்தின் நிபந்தனைகள் யாவை?

5. சார்டிஸ்டு இயக்கம் என்பது என்ன?

6. குறிப்பெழுதுக :—
   (a) கல்விச் சட்டம் (1870)
   (b) பணம் மசோதா (1911)
   (c) இயந்திரச் சட்டங்கள்
   (d) சக்திச் சமநிலை

7. பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய பரோபகாரத் தன்மையால் ஏற்பட்ட நல் விளைவுகள் என்ன?

இந்தக் கேள்விகள் எல்லாம் எந்த நாட்டைக் குறித்தன என்று தெரிகிறதா? எல்லாம் இங்கிலாந்து நாட்டைப் பற்றியவைதான். ஆனால் அவ்விதம் கேள்விகளில் குறிப்பிடவில்லை! ஏன் குறிப்பிட வேண்டும்? தேசத்தின் பெயர் குறிப்பிடாவிட்டால் இங்கிலாந்து தேசம் என்று அறிக!

சாதாரணமாக வேறு நாடுகளில், நாட்டின் பெயர் குறிப்பிடாத ஒரு கேள்வி கேட்கப்பட்டால் அது தாய் நாட்டைப் பற்றியதாயிருக்கும். இந்தியாவில் படித்த வகுப்பாரின் தாய்நாடு இங்கிலாந்து தானே! அதனாலேதான் பெயர் குறிப்பிடாவிட்டால் 'இங்கிலாந்து' என்று தெரிந்து கொள்ள வேண்டும். அதனாலேதான் இங்கிலாந்தின் பழைய குடியேற்ற நாட்டுக் கொள்கை, பென்னித்தபால், தொழிற் புரட்சி, 1832-வருஷத்துச் சீர்திருத்தச் சட்டம், 1870-ம் வருஷத்துக் கல்விச் சட்டம், 1911-ம் வருஷத்துப் பண மசோதா ஆகியவை குறித்து நமது பிள்ளைகள் தெரிந்துகொள்ள வேண்டும். தெரிந்து கொள்ள முடியுமா? ஒருநாளும் முடியாது! பேராசிரியர்களுக்கும் அரசியல் தலைவர்களுக்குமே தெரிந்து கொள்ள முடியாதே! நம்முடைய பதின்மூன்று வயதுக் குழந்தைகளுக்கு எப்படித் தெரியும்? ஒரு நாளும் தெரியாது! ஆகையால் செய்யவேண்டியது என்ன? 'மாடர்ன் ஹிஸ்டரி' என்னும் பெயருடைய அபத்தக் களஞ்சியமான பாடப் புத்தகத்தை நம் குழந்தைகள் நெட்டுருச் செய்ய வேண்டும். சிறுவர்கள் சிறுமிகள் அனைவரும் பக்கம் பக்கமாக நெட்டுருச் செய்ய வேண்டும். நெட்டுருச் செய்து அறிவை மழுங்கச் செய்து கொள்ள வேண்டும். அப்புறம் பரீட்சை எழுதவேண்டும்; அதாவது பல நாள் மனப் பாடம் செய்ததை மூன்று மணி நேரம் ஒரே மூச்சாக உட்கார்ந்து எழுதவேண்டும். அப்படி எழுதியும் பரீட்சையில் தேறாவிட்டால் மனக்குன்றி அவமானப்பட்டு வேதனையில் மூழ்க வேண்டும். இல்லாவிட்டால், தற்கொலை செய்து கொண்டு சாக வேண்டும்!

இந்த மாதிரி பாடங்களை சொல்லிக் கொடுக்கும் உபாத்தியாயர்களும் உபாத்தியாயினிகளும் மனித உணர்ச்சி உள்ளவர்கள் தானா அல்லது வெறும் இயந்திரங்களா என்று சந்தேகிக்கத் தோன்றுகிறது.

பாடதிட்டங்களை வகுத்தவர்களைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. அவர்கள் கொலை பாதக ராட்சத இனத்தைச் சேர்ந்தவர்கள்; குழந்தைக் கொல்லிகள்; இந்திய சாதியை க்ஷீணிக்கச் செய்து அடியோடு அழிப்பதற்குச் சூழ்ச்சி செய்தவர்கள்.

இப்படிப்பட்ட கல்வி முறையையும் பாட திட்டத்தையும் இன்னும் வைத்து நடத்துகிறார்களே, அந்த மகானுபாவர்கள் விஷயத்தில் கடவுள்தான் கருணை செய்யவேண்டும்.

தாதாபாய் நௌரோஜி முதல் காந்தி மகாத்மா வரையில், "தேசியக் கல்வி, தேசியக் கல்வி" என்று கதறினார்கள். அந்த மாபெருந் தலைவர்கள், தேசபக்த உத்தமர்கள், தியாகமூர்த்திகளின் ஆவிகள் எல்லாம் வானவெளியிலே அதோ சோகம் ததும்பும் முகத்துடனே நிற்கின்றன; நின்று கண்ணீர் வடிக்கின்றன!

(தொடரும்)



# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ராகி

## 25. மூன்று பவுன் தலைவரி

பாலசுந்தரம் காந்திஜியைத் தேடிவந்த சமயம் மிகவும் நல்ல சமயமாயிற்று. பாலசுந்தரத்தின் மூலமாகக் காந்திஜி தென்னாப்பிரிக்காவில் அப்போது வசித்த பதினாயிரக் கணக்கான ஒப்பந்தத் தொழிலாளிகளின் நிலைமையைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிந்தது. அவர்களுடைய தலையில் போடுவதற்கு ஒரு பெரிய பாறாங்கல் தயாராகிக் கொண்டிருப்பதையும் அவர் அறிந்து கொள்ளக் கூடியதாயிற்று.

அந்த 1894-ம் ஆண்டில் நேட்டால் அரசாங்கத்தார் இந்தியர்களுக்கு ஒரு மிகப் பெரும் அநீதியை இழைக்கப் பிரயத்தனப் பட்டுக் கொண்டிருந்தார்கள். அதாவது ஒப்பந்தக் கூலியாக வந்து ஒப்பந்தம் நீங்கிய ஒவ்வொரு தொழிலாளி மீதும் 25 பவுன் தலைவரி விதிக்க யோசனை செய்தார்கள்!

இப்படிப்பட்ட அபூர்வமான யோசனையை நேட்டால் வெள்ளைக்காரர்கள் ஏன் செய்தார்கள் தெரியுமா?

ஒப்பந்தத் தொழிலாளியாக வந்த இந்தியர்கள் நல்ல உழைப்பாளிகள். விவசாயத் தொழிலில் கை தேர்ந்தவர்கள். எளிய வாழ்க்கை நடத்துகிறவர்கள்.

இவர்களை ஒப்பந்தக் காலம் நீங்கிய பிறகு தென்னாப்பிரிக்காவில் சுயேச்சையாக வசிக்கும்படி விட்டால், வெகு சீக்கிரத்தில் வலுத்துப் போய் விடுவார்கள்! சொந்த நிலம் வைத்துக்கொண்டு பயிர் செய்து சொந்த வீடு கட்டிக்கொண்டு வாழ்வார்கள். சிலர் வியாபாரத் துறையிலும் இறங்குவார்கள். ஐரோப்பியரைவிட அதிகமாகப் பணம் சேர்த்து விடுவார்கள். அடிமைகளைப் போல் ஐரோப்பியர்களுக்கு வேலை செய்து கொண்டு காலந் தள்ள மாட்டார்கள். பிறகு தென்னாப்பிரிக்காவிலுள்ள ஐரோப்பியர்கள் பாடு ஆபத்தாய்ப் போய்விடும்.

ஆகையால் ஒப்பந்தக் கூலிகளாக வருகிறவர்கள் ஒப்பந்தக்காலம் நீங்கிய பிறகு சுயேச்சையாக வாழ அனுமதிக்கக் கூடாது என்று நேட்டால் வெள்ளைக்காரர்கள் கருதினார்கள். ஆனால் ஒப்பந்த காலம் முடிந்தவர்களைத் திருப்பி அனுப்புவதும் அவ்வளவு சுலபமான காரியமில்லை. ஏனெனில், இந்தியாவில் ஆள் திரட்டியபோது ஒப்பந்தம் நீங்கியதும் அவர்கள் சுயேச்சையாகத் தென்னாப்பிரிக்காவில் வசிக்கலாம் என்று உறுதி கொடுக்கப்பட்டது. ஆகவே அவர்களைப் பலவந்தமாய்த் திருப்பி அனுப்ப முடியாது. அவர்களே திரும்பிப் போகும்படி செய்ய வேண்டும். அல்லது மறுபடியும் வெள்ளைக்காரரிடம் வேலைக்கு அமரும்படி செய்ய வேண்டும்!

இதற்கு உபாயம் என்ன? "போடு தலைவரி! இந்தியர் சுயேச்சையாக வாழ்வதை அசாத்தியமாகச் செய்!" என்று சில புண்ணியவான்கள் உபாயம் சொன்னார்கள். அதை நேட்டால் சர்க்காரும் ஒப்புக் கொண்டார்கள். ஒப்பந்தக் கூலியாக வந்து விடுதலை பெற்ற ஒவ்வொரு இந்தியனும் தலைக்கு வருஷத்துக்கு இருபத்தைந்து பவுன் தலைவரி கொடுக்க வேண்டும் என்று சொன்னார்கள்!

எவ்வளவு தான் கஷ்டப்பட்டு உழைத்தாலும் இந்தியத் தொழிலாளி ஒருவன் வருஷத்துக்கு 12 பவுனுக்கு மேல் சம்பாதிக்க முடியாது. இருபத்தைந்து பவுன் வரி கொடு என்றால் எப்படிக் கொடுப்பது? இந்த நிபந்தனையின்படி எந்தத் தொழிலாளி இந்தியனும் அங்கே இருக்க முடியாது!

அப்படியென்றால் திரும்பிப் போய்த் தானே தீர வேண்டும்!

இந்தக் கொடிய அநீதியைப்பற்றி அறிந்த காந்திஜி நேட்டால் இந்தியக் காங்கிரஸ் மூலம் கிளர்ச்சி தொடங்கினார். அந்தக் கிளர்ச்சியின் ஒலி இந்தியா வரையில் சென்று எட்டியது. நேட்டால் வெள்ளைக்காரர்கள் பார்த்தார்கள். தங்கள் யோசனைக்கு இந்திய அரசாங்கத்தின் சம்மதம் தேவை என்று கருதினார்கள்.

இந்திய சர்க்காரின் சம்மதத்தின் பேரிலும் ஒத்துழைப்பின் பேரிலும் அல்லவா ஒப்பந்தத் தொழிலாளிகளை அடிமை வேலை செய்யத் திரட்ட வேண்டியிருக்கிறது? ஆகையால் தாங்கள் போடும் தலைவரியை இந்திய சர்க்கார் ஆட்சேபித்து ஒப்பந்தக் கூலிகள் அனுப்புவதையே நிறுத்தி விட்டால் என்ன செய்கிறது என்று கவலைப்பட்டார்கள்.

ஆகவே நேட்டால் வெள்ளைக்காரர்களின் பிரதிநிதிகளாக ஸர். ஹென்றி பின்ஸ், மிஸ்டர் மேஸன் என்னும் இருவர் இந்தியாவுக்குச் சென்றார்கள். அச்சமயம் இந்தியாவில் லார்ட் எல்ஜின் என்பவர் கவர்னர் ஜெனரலாகவும் இராஜப் பிரதிநிதியாகவும் இருந்தார். இந்த இராஜப் பிரதிநிதி என்ன செய்தார் தெரியுமா? "இருபத்தைந்து பவுன் தலைவரி கூடவே கூடாது" என்று சொல்லி விட்டார். "கொடுக்க முடியாத வரியாகப் போடாதீர்கள். கொடுக்கக் கூடிய அளவாகப் போடுங்கள்!" என்றார் அந்தப் புண்ணியவான். அதாவது தலைக்கு மூன்று பவுன் வரி விதிக்க லார்ட் எல்ஜின் சம்மதம் கொடுத்தார். இந்தத் தலைவரி தொழிலாளிக்கு மட்டும் அல்ல; அவன் குடும்பத்தோடு வாழ விரும்பினால் மனைவிக்கும் தலைவரி கொடுக்க வேண்டும். பதின்மூன்று வயதுக்கு மேற்பட்ட பெண் குழந்தைக்கும், பதினாறு வயதுக்கு மேற்பட்ட ஆண் குழந்தைக்கும் மூன்று பவுன் வரி கொடுக்க வேண்டும். இரண்டு குழந்தைகள் உள்ள குடும்பம் மாதம் ஒரு பவுன் வரி கொடுத்தாக வேண்டும்!

உலகத்தில் வேறு எந்த தேசத்திலும் எந்தக் காலத்திலும் இம்மாதிரி அநியாய வரி போடப்பட்டதில்லை. ஆயினும் இந்த அநியாயத்துக்கு இந்தியாவை அப்போது ஆண்ட இராஜப் பிரதிநிதி சம்மதித்தார். "இருபத்தைந்து பவுன் வரி போடுவதை மூன்று பவுனாகச் செய்தேனே! இந்த சகாயம் போதாதா?" என்றார். உண்மையில் இது சகாயமே யில்லை. இருபத்தைந்து பவுன் வரி போட்டால் நிச்சயமாகத் தென் ஆப்பிரிக்காவில் எந்தத் தொழிலாளி இந்தியனும் இருக்க முடியாது; திரும்பிப் போய் விடுவான். இந்தியாவிலிருந்து புதிய தொழிலாளிகளைக் கொண்டு வர முடியாது. மூன்று பவுன் தலை வரி என்றால், இந்தியத் தொழிலாளிகள் போவதா இருப்பதா என்று தயங்குவார்கள். ஒரு சிலர் இருந்தே பார்க்கலாம் என்று இருப்பார்கள். அடியோடு கொல்லுவதற்குப் பதிலாகக் குற்றுயிராக வைத்திருப்பதற்குச் சமமாகும்.

ஆகவே, தலை வரி மூன்று பவுன் ஆனது பற்றிக் காந்திஜி திருப்தி யடையவில்லை. அதை ஒரு வெற்றியாகவும் கருதவில்லை. இந்திய வைஸராய் அதற்குச் சம்மதம் கொடுத்தது பெருந் தவறு என்று கருதினார். இந்தியா தேசத்துக்கும் இந்திய மக்களுக்கும் அது பெரும் அவமானம் என்றும் எண்ணினார். ஆகையால் எப்பாடு பட்டாவது அந்தத் தலைவரியை ஒழித்துவிட வேண்டும் என்று காந்திஜியின் யோசனையின் பேரில் நேட்டால் இந்தியக் காங்கிரஸ் கங்கணம் கட்டிக் கொண்டது. ஆனால் அந்த முயற்சி இலேசில் வெற்றி யடையவில்லை. இருபது வருஷம் காந்திஜியின் தலைமையில் சாத்விகப் போராட்டம் நடந்த பிறகுதான் வெற்றி கிடைத்தது. முடிவாக நடந்த பெரும் போராட்டத்தில் தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் பதினாயிரம் பேருக்கு மேல் சிறை சென்றார்கள். பலர் துப்பாக்கிப் பிரயோகத்தினால் மரணம் அடைந்தார்கள். அவர்களுடைய தியாகங்களின் பலனாக முடிவில் வெற்றி கிடைத்தது; மூன்று பவுன் தலை வரியும் ஒழிந்தது.

தலைவரிப் போராட்டத்தைப் பற்றிக் காந்தி மகாத்மா எழுதி யிருப்பதாவது:—

"தளராத நம்பிக்கையும் தளரவிடப்படாத பொறுமையும் இடைவிடாத முயற்சியும் இருந்திராவிடின் அப்போராட்டம் வெற்றி பெற்றிருக்க முடியாது. தென்னாப்பிரிக்கா இந்திய சமூகம் அப்போராட்டத்தை இடையில் கை விட்டிருந்தால் — கிளர்ச்சியை நிறுத்தி வரிக்குட் படுவதைத் தவிர வேறு வழியில்லை யென்று காங்கிரஸ் தீர்மானித்திருந்தால்—இன்று வரை அக்கொடிய வரி விதிக்கப்பட்டே வந்திருக்கும். தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கும் சரி, பாரத தேசத்துக்கும் சரி மகத்தான ஓர் அவமானத்துக்கு அறிகுறியாய் அது விளங்கிக் கொண்டு வந்திருக்கும்."

## 26. தாய் நாட்டில்

தென்னாப்பிரிக்காவுக்குக் காந்திஜி வந்து மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரு முறை தாய்நாடு சென்று வர விரும்பினார். இந்த மூன்று வருஷத்தில் தென்னாப்பிரிக்கா இந்தியர்களிடையே காந்திஜிக்கு நல்ல பழக்கம் ஏற்பட்டு விட்டது. பலரும் சிநேகிதர்கள் ஆனார்கள். பாரிஸ்டர் தொழிலும் நன்றாய் நடந்தது. ஆகவே, இந்தியாவுக்குப் போய்ச் சில நாள் இருந்துவிட்டு மனைவியையும் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு வருவது என்று காந்திஜி தீர்மானித்தார். இந்தியாவில் தங்கி யிருக்கும் சமயத்தில் தென்னாப்பிரிக்கா இந்தியர் நிலைமையைப் பற்றிக் கொஞ்சம் பிரசாரம் செய்யலாம் என்றும் எண்ணினார்.

தாம் இல்லாத சமயத்தில் நேட்டால் காங்கிரஸ் வேலையையும் சமூக சேவையையும் கவனிப்பதற்கு ஆதம்ஜி மியாகான், பார்ஸி ருஸ்டம்ஜி ஆகிய இரு நண்பர்களை நியமித்துவிட்டுப் "பொங்கோலா" என்னும் கப்பலில் பிரயாணமானார்.

பிரயாணத்தின்போது காந்திஜி உருது பாஷையும் தமிழும் கற்றுக் கொள்ள முயன்றார். தென்னாப்பிரிக்காவி லிருந்த ஒப்பந்தத் தொழிலாளிகளில் பெரும் பாலோர் மதராஸிகள் அல்லவா? அவர்களுக்கு ஊழியம் செய்ய வேண்டுமானால் தமிழும் தெலுங்கும் கற்றுக் கொள்ள வேண்டும் என்று காந்திஜி கருதினார். கப்பல் டாக்டர் வைத்திருந்த "தமிழ் ஸ்வ போதினி" புத்தகத்தை வாங்கிப் படித்தார். தமிழ் எழுத்துக்களை நன்றாக எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டார். பிறகு காந்திஜிக்கு ஏற்பட்ட பல முக்கிய அலுவல்களினால் தொடர்ந்து தமிழ் கற்க முடியவில்லை. சிறைவாசம் செய்த காலங்களில் மட்டும் சிறிது அவகாசம் கிடைத்தது. தமிழ் பாஷையைப் பூரணமாகப் பயின்று பேசவும் எழுதவும் சக்தி பெறவில்லையே என்ற மனக்குறை காந்திஜிக்கு எப்போதும் இருந்து வந்தது.

கப்பல் ஏறிய 24-ம் நாள், 1896-ம் வருஷத்தின் மத்தியில், காந்திஜி ஹூக்ளி நதியை அடைந்தார். அந்த நதியின் சௌந்தரியங்களை அனுபவித்துக் கொண்டே இன்னும் கொஞ்சம் பிரயாணம் செய்து கல்கத்தாவில் வந்து இறங்கினார். கல்கத்தாவில் தங்காமல் அன்றைய தினம் ரயிலிலேயே பம்பாய்க்குப் புறப்பட்டார்.

பம்பாய்க்குச் செல்லும் மார்க்கத்தில் ரயில் அலகாபாத்தில் 45 நிமிஷம் நின்றது. அந்த நேரத்தில் நகரைச் சுற்றிப் பார்த்து விட்டு வரலாம் என்று சென்றார். மருந்துக் கடை ஒன்றில் ஒரு மருந்து வாங்குவதற்காக நின்றதில் கொஞ்சம் தாமதம் ஆகி விட்டது. மருந்துக் கடைக்காரர் தூங்கி வழிந்து கேட்ட மருந்தைக் கொடுப்பதற்கு நேரம் செய்து விட்டார். ஆகையால் காந்திஜி திரும்பி ஸ்டேஷனுக்கு வந்த போது ரயில் போய் விட்டது! நல்ல வேளையாக ஸ்டேஷன் மாஸ்டர் காந்திஜியின் சாமான்களை மட்டும் வண்டியி லிருந்து வெளியே எடுத்து வைத்திருந்தார்.

அடுத்த ரயில் மறுநாளைக்குத்தான் வரும். ஆகவே அந்த ஒரு தினத்தை வீணாக்க வேண்டாம் என்று காந்திஜி தீர்மானித்தார். அலகாபாத்தில் அப்போது "பயனியர்" என்னும் பத்திரிகை பிரசித்தி பெற்றிருந்தது. அதை நடத்தியவர்கள் ஐரோப்பியர்கள். இந்தியர்களின் கோரிக்கைகளைப் பொதுவாக எதிர்ப்பதே "பயனியர்" பத்திரிகையின் கொள்கை. இது தெரிந்திருந்தும் காந்திஜி அந்தப் பத்திரிகைக் காரியாலயத்துக்குப் போனார். இந்தியாவில் எல்லாக் கட்சியாருடைய ஆதரவையும் தேட வேண்டும் என்று அவர் தீர்மானித்திருந்தபடியால் போனார். பத்திரிகாசிரியர் மிஸ்டர் செஸ்னிக்குத் தம்முடைய நோக்கத்தைக் குறிப்பிட்டுச் சீட்டு அனுப்பினார். மிஸ்டர் செஸ்னி காந்திஜியைப் பார்ப்பதற்கு இசைந்தார். காந்திஜி அவரிடம் தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் கஷ்டங்களைப் பற்றி விவரமாகக் கூறினார். எல்லாவற்றையும் கேட்ட மிஸ்டர் செஸ்னி, "நீங்கள் இதையெல்லாம் குறிப்பிட்டு ஒரு கட்டுரை எழுதுங்கள். அதை வெளியிடுகிறேன். ஆனால் தலையங்கத்தில் தங்கள் கட்சியை ஆதரித்து எழுத முடியாது. தென்னாப்பிரிக்கா ஐரோப்பியர்களின் கட்சி இன்னது என்பதையும் கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகுதான் அதைப் பற்றி நான் அபிப்பிராயம் எழுத முடியும்" என்றார்.

"ரொம்ப வந்தனம். எங்களுடைய கட்சியைப் பிரசுரிக்க ஒப்புக் கொண்டதே

"போதும்!" என்று சொல்லிவிட்டுக் காந்திஜி விடைபெற்றுக் கொண்டார்.

இப்படிப் 'பயனியர்' ஆசிரியர் சொன்னதிலிருந்து ஒன்றன் பின் ஒன்றாகப் பல சம்பவங்கள் நிகழ்ந்தன. கடைசியில், காந்திஜி மறுபடியும் தென்னாப்பிரிக்கா சென்று இறங்கியபோது நேட்டால் ஐரோப்பியர்கள் காந்திஜியைக் கொன்றுவிட முயற்சித்ததில் வந்து முடிந்தது! இவ்வளவுக்கும் காரணம் அலகாபாத்தில் ஒரு மருந்துக் கடைக்காரன் தூங்கு மூஞ்சியாயிருந்ததும், அதன் பலனாகக் காந்திஜிக்கு ரயில் தப்பிப் போனதுந்தான். உலகத்தில் எவ்வளவு சின்னக் காரணத்திலிருந்து எவ்வளவு பெரிய பெரிய காரியங்கள் எல்லாம் விளைந்து விடுகின்றன!

தம்பி! இந்த இடத்தில் உனக்கு ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். காந்திஜி இந்திய விடுதலை இயக்கத்தின் மாபெருந் தலைவராயிருந்த காலத்தில் நம் நாட்டுப் பத்திரிகைப் பிரதிநிதிகள் சிலர் அவர் பேரில் ஒரு குறை கூறுவதுண்டு. "வெள்ளைக்காரப் பத்திரிகை நிருபர்களுக்குக் காந்திஜி விசேஷ சலுகை காட்டுகிறார். இந்தியப் பத்திரிகை நிருபர்களைக் கவனிப்பதில்லை!" என்று புகார் சொல்வார்கள். இது சுத்தத் தவறான விஷயம். காந்திஜிக்கு அந்தமாதிரி பட்சபாதம் ஒன்றும் கிடையாது. இந்தியப் பத்திரிகைகளை விட ஐரோப்பியப் பத்திரிகைகளுக்கு அவர் அதிக மதிப்புக் கொடுப்பதுமில்லை. ஆனால் ஒரு விஷயத்தை வெளி உலகத்துக்குத் தெரிவிக்க வேண்டும் என்றால், யாரிடம் சொன்னால் வெளி உலகத்துக்குத் தெரியுமோ, அவர்களிடந்தானே சொல்ல வேண்டும்? இந்தியாவின் கட்சியில் உள்ள நியாயத்தை அமெரிக்கா அறிய வேண்டுமென்றால், அமெரிக்க நிருபர்களிடம் சொல்லித்தானே ஆக வேண்டும்?—இந்த விஷயத்தைத் தெரிந்து கொள்ளாமல் நம்மவர்கள் சிலர் மகாத்மா மீது குறைகூறினார்கள்! பெரியவர்களின் விஷயமே இப்படித்தான்! அவர்களை மற்றவர்கள் அறிந்து கொள்ளாமல் புகார் சொல்லுவது எப்போதுமே உலக இயல்பாயிருந்து வருகிறது. நிற்க.

அலகாபாத்திலிருந்து பம்பாய் சென்று அங்கே தங்காமல் நேரே இராஜகோட்டைக்கு மகாத்மா சென்றார். அங்கே தென்னாப்பிரிக்கா இந்தியரின் நிலைமை பற்றி ஒரு துண்டுப் பிரசுரம் எழுதினார். அதை எழுதி அச்சிட்டு வெளியிடுவதற்கு ஒரு மாதத்திற்கு மேலாயிற்று. அந்தப் பிரசுரத்தின் மேலட்டை பச்சை நிறமாயிருந்தபடியால் அது 'பச்சைப் பிரசுரம்' என்று பெயர் பெற்றது. தென்னாப்பிரிக்கா இந்தியரின் கஷ்டமான நிலைமையைக் காந்திஜி அதில் ஓரளவு குறைத்தே எழுதியிருந்தார். மிதமான பாஷையை உபயோகித்திருந்தார். மிகைப்படுத்திச் சொன்னதாக யாரும் குற்றம் சாட்ட இடங்கொடுக்கக்கூடாது என்பது காந்திஜியின் நோக்கம். மேலும் தூரத்தில் நடக்கும் விஷயங்களைப் பற்றிக் கொஞ்சம் சொன்னாலும் அது அதிகமாகத் தோன்றலாம் அல்லவா?

மேற்படி பச்சைப் பிரசுரத்தில் பதினாயிரம் பிரதிகள் அச்சிட்டு இந்தியாவெங்குமுள்ள எல்லாக் கட்சித் தலைவர்களுக்கும் பத்திரிகைகளுக்கும் அனுப்பினார். முதன் முதலில் அதைப் பிரசுரித்ததோடு தலையங்கத்திலும் அதைப் பற்றிக் குறிப்பிட்டு எழுதிய பத்திரிகை "பயனியர்" பத்திரிகைதான். இந்தப் பத்திரிகைக் கட்டுரையின் சாராம்சம் ராய்ட்டர் செய்தி ஸ்தாபனத்தினால் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டது. அதன் சுருக்கம் லண்டனிலிருந்து நேட்டாலுக்கு அனுப்பப் பட்டது. அது மூன்றே மூன்று வரிகள் அடங்கிய தந்திச் செய்தி. நேட்டாலில் இந்தியர் நடத்தப்படும் கொடூரமான விதத்தைப் பற்றிக் காந்திஜி ரொம்பவும் கண்டித்துக் கட்டுரை எழுதியிருப்பதாக அந்தச் செய்தி பொதுப்படையாகச் சொல்லிற்று. மேற்படி தந்திச் செய்தி நேட்டால் ஐரோப்பியர்களுக்கு மிகவும் கோபத்தை உண்டாக்கிற்று. அவர்கள் தங்களுடைய கோபத்தை எப்படிக் காட்டினார்கள் என்பதைப் பின்னால் பார்க்கப் போகிறோம்.



ஸர் பிரோஸிஷா மேத்தா

'பச்சைப் பிரசுரம்' அச்சிட்டுப் பத்திரிகைகளுக்கு அனுப்பியதுடன் மகாத்மா திருப்தி அடைந்து விடவில்லை. இந்தியாவின் பிரபல அரசியல் தலைவர்களையும் பிரமுகர்களையும் பார்த்துப் பேசி அவர்களுடைய ஆதரவைத் தேட விரும்பினார். இந்த நோக்கத்துடன் முதலில் பம்பாய்க்குச் சென்றார். பம்பாயில் அப்போது மூன்று பிரமுகர்கள் பிரசித்தி அடைந்திருந்தார்கள். அவர்களில் ஒருவர் ரானடே; இன்னொருவர் பட்ருடீன் தயாப்ஜி; மூன்றாவது பிரமுகர் ஸர் பிரோஸ்ஷா மேத்தா. முன்னவர் இருவரும் அச்சமயம் பம்பாய் ஹைகோர்ட்டின் நீதிபதிகளாயிருந்தார்கள். அந்தக் காலத்திலெல்லாம் ஆரம்பத்தில் அரசியல் தலைவர்களாயிருப்பவர்கள் சீக்கிரத்தில் பெரிய சர்க்கார் உத்தியோகங்களுக்குப் போய்விடுவது சர்வசாதாரணமாயிருந்தது.

ரானடே, தயாப்ஜி இருவரும் காந்திஜியிடம், "எங்களுடைய அநுதாபமெல்லாம் உங்கள் பக்கந்தான் இருக்கிறது. ஆனால் நாங்கள் நீதிபதி உத்தியோகம் வகிப்பதால் பகிரங்கமாக எதுவும் செய்ய முடியாது. உங்களுக்குத் திறமையாக வழி காட்டி உதவி செய்யக் கூடியவர் ஸர் பிரோஸ்ஷா மேத்தாதான்!" என்று சொன்னார்கள்.

இதிலிருந்து ஸர் பிரோஸ்ஷா மேத்தா எவ்வளவு செல்வாக்குடையவர் என்பதைக் காந்திஜி நன்கு தெரிந்து கொண்டார். உடனே அவரிடம் சென்றார். "பம்பாயின் சிங்கம்" என்றும் "பம்பாய் மாகாணத்தின் முடிசூடா மன்னர்" என்றும் ஸர் பி. எம். மேத்தா பட்டம் பெற்றிருந்தார். அப்படிப் பட்டவரைப் பார்ப்பதற்குச் சிறிது தயக்கத்துடனேதான் காந்திஜி போனார். ஆனால் மேத்தாவோ அன்புள்ள தந்தை புதல்வனை வரவேற்பது போல் மகாத்மாவை வரவேற்றார். அப்போது மேத்தாவை அவருடைய அன்புக்குரிய சீடர்களான ஸ்ரீ டி. ஸி. வாச்சா, ஸ்ரீ காமா முதலியவர்கள் புடை சூழ்ந்திருந்தார்கள். ஸர் பிரோஸ்ஷா மேத்தா காந்திஜி கூறியதைச் செவி கொடுத்துக் கேட்டார். பின்னர், "உங்களுடைய கட்சி மிகவும் நியாயமானது. சட்டாயம் உங்களுக்கு உதவி செய்ய வேண்டியதுதான். இங்கே ஒரு பொதுக் கூட்டத்துக்கு முதலில் ஏற்பாடு செய்கிறேன்" என்றார். பொதுக் கூட்டத்துக்குத் தேதியும் குறிப்பிடப் பட்டது. அந்த தினத்துக்கு முதல்நாள் தம்மை வந்து பார்க்கும்படி ஸர் பிரோஸ்ஷா மேத்தா காந்திஜிக்குச் சொல்லி அனுப்பினார். (தொடரும்)

---

அருப்புக்கோட்டை சாலியர் மகாஜன வாசகசாலையின் ஆண்டுவிழா "கல்கி" ஆசிரியரின் தலைமையில் 20—3—48ல் சிறப்பாக நடந்தேறியது. அன்று அருப்புக்கோட்டைக் கூட்டுறவுச் சங்கத்தில் நடைபெற்ற சிற்றுண்டி விருந்தின்போது எடுத்த படம். நடுநாயகமாக வீற்றிருப்பவர் அருப்புக்கோட்டை காங்கிரஸ் கமிட்டிக்கும் மற்றும் பல பொது ஸ்தாபனங்களுக்கும் தலைவரான ஸ்ரீ அ. போ. நாராயண ரூப்பனார்.



# அலை ஓசை

கல்கி



ஒன்பதாம் அத்தியாயம்

## கதவு திறந்தது

**வா**சலில் வந்து நின்றவர்கள் யாசகர்கள் அல்ல, சந்தா வசூலிக்க வந்தவர்கள் அல்ல, பொங்கல் இனாம் கேட்க வந்தவர்களும் அல்ல என்பது நிச்சயமானபின், 'தேவி ஸதனத்'தின் வாசற் கதவு திறக்கப்பட்டது.

"வாருங்கள், ஐயா! வாருங்கள்! நீங்கள் தானா? யாரோ என்று பார்த்தேன். இந்தக் காலத்தில் வாசற் கதவைத் திறந்து வைக்க முடியவில்லை. திறந்தால் போச்சு! யாராவது வீண் ஆட்கள் எல்லாம் திறந்த வீட்டில் நாய் நுழைகிறதுபோல நுழைந்து விடுகிறார்கள். அவர்களால் உங்களைப் போன்றவர்களும் வாசலில் நிற்கும்படி நேரிட்டு விடுகிறது!" என்று சொல்லிக் கொண்டே பத்மலோசன சாஸ்திரி வந்தவர்கள் இருவரையும் உள்ளே அழைத்துச் சென்றார்.

"உட்காருங்கள்! ஏன் நிற்க வேண்டும்? உட்காருங்கள் என்றால்!......... பாதகமில்லை, சுப்பய்யரே! சோபாவிலேயே தாராளமாக உட்காருங்கள். நீங்கள் உட்கார்ந்ததினால் சோபா தேய்ந்தா போய்விடும்? அந்த மாதிரி 'பணிக்குப்' பார்க்கிறவர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்கிறதேயில்லை. தரையில் ஆயிரம் ரூபாய் ரத்தினக் கம்பளத்தை விரிப்பார்கள். அப்புறம் யாராவது அதில் கால் வைத்து நடந்து விட்டால், 'ஐயையோ! அழுக்காய்ப் போகிறதே!' என்று அவஸ்தைப் படுவார்கள். இரண்டாயிரம் ரூபாய் செலவு செய்து ஸோபா வாங்கிப் போட்டுவிட்டு அதன்மேலே அழுக்கும் சிக்கும் பிடித்த உறையைப் போட்டு மூடி வைப்பார்கள்! உங்களுக்குத் தெரியுமா? நான் ராமநாதபுரம் ஜில்லாவிலே ஸப் ஜட்ஜ் உத்தியோகம் பார்த்தபோது ஒரு தனிகர் வீட்டுக்குப் போயிருந்தேன். அந்த வீட்டின் தூணுக்கு உறைபோட்டு வைத்திருந்தது, ஸார்! தூணுக்கு உறைபோட்டு வைத்திருந்தது! கரும் சலவைக் கல்லில் தூண்; ஒவ்வொரு தூணுக்கும் செலவு ஐயாயிரம் ரூபாய்! அவ்வளவு வேலைப்பாடான தூணைச் செய்துவிட்டு அதை உறையைப் போட்டு மூடி வைத்துவிடுகிறார்கள்! எப்படியிருக்கிறது கதை! பரவாயில்லை, நீங்கள் உட்காருங்கள்!" என்று பத்மலோசன சாஸ்திரியார் மூச்சு விடாமல் பேசிக் கொண்டேயிருந்தார். சுப்பய்யரும் கிட்டாவய்யரும் இடம் பார்த்து மெதுவாக உட்கார்ந்து கொண்டார்கள்.

சாஸ்திரிகள் சிறிது மூச்சு விட்ட சமயம் பார்த்துச் சுப்பய்யர் "போன ஞாயிற்றுக்கிழமை சர்வக்ஞ சங்கத்தில் பாகவத உபந்நியாசம் நடந்ததே? அதில் ரொம்ப ரஸமான கட்டம் எது தெரியுமா? தாங்கள் பாகவதருக்கு உபசாரம் சொன்ன கட்டந்தான். ஆஹா! எவ்வளவு கச்சிதமாய்ப் பேசினீர்கள், போங்கள். பேசினால் அப்படி அழகாகப் பேசவேண்டும்; இல்லாவிட்டால் பேசாமல் வாயை மூடிக் கொண்டிருக்க வேண்டும்! எல்லாரும் பேசுகிறார்களே!" என்றார்.

சுப்பய்யருக்கு இன்ஷியூரன்ஸ் ஏஜெண்டு உத்தியோகம். யாராயிருந்தாலும் சமயம் கிடைத்தபோது ஒரு நல்ல வார்த்தை சொல்லி வைத்தால் எப்போதாவது பயன்படும் என்பது அவருடைய நம்பிக்கை. இந்தக் கல்யாணம் மாத்திரம் நிச்சயமானால் மாப்பிள்ளைப் 'பிள்ளையாண்டானைப்' பத்தாயிரம் ரூபாய்க்கு இன்ஷியூர் செய்து விடுவது என்று மனதிற்குள் திட்டம் போட்டுக் கொண்டிருந்தார்.

ஆனால் சாஸ்திரிகள் இலேசான ஆள் அல்ல; முகஸ்துதிக்கு மசிந்து ஏமாந்து போகிறவரும் அல்ல.

"ஆமாம், ஐயா, ஆமாம்! உம்மைப் போல இதுவரை தொண்ணூறு பேர் இப்படி என்னை ஸ்தோத்திரம் செய்து விட்டார்கள். அபாரமாய்ப் பேசி விட்டேன் என்று சர்டிபிகேட் கொடுத்து விட்டார்கள். ஆனால் நான் வார்த்தை சொன்னதின் தாத்பரியம் யாருடைய மனதிலாவது பதிந்ததோ என்றால், கிடையவே கிடையாது!..." என்று சாஸ்திரிகள் கூறிவந்தபோது, "அது என்ன அப்படிச் சொல்கிறீர்கள்?" என்று சுப்பய்யர் குறுக்கிட்டுக் கேட்டார்.

"ஏது என்ன எப்படிச் சொல்கிறீர்கள்? — எல்லாம் சரியாய்த்தான் சொல்கிறேன். நான் சொல்கிறதற்குக் கையிலே ருசுவும் வைத்திருக்கிறேன். ஏதடா, காவேரி நதி தீரத்திலிருந்து ஒரு பௌராணிகரை அழைத்திருக்கிறோமே, அவருக்கு ஏதாவது மரியாதை செய்து அனுப்ப வேணுமென்று யாருக்காவது தோன்றுகிறதோ? — தானாகத் தோன்றாவிட்டாலும் நான் சொன்னபிறகாவது தோன்ற வேண்டாமோ? ஊஹூம், இன்று வரையில் ஒரு காலணா ஒருவரும் கொடுத்த பாடில்லை. பட்டணவாசம் அப்படியாக ஜனங்களின் மனதைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கிவிட்டது. ஏதோ நம்முடைய கிராமாந்தரங்களிலே மட்டுந்தான் இன்னமும் தான தர்மம் என்பது கொஞ்சம் இருந்து வருகிறது. பட்டணங்களிலே தர்மம் அடியோடு பாழ்த்துப் போய்விட்டது. ஒரு சமாசாரம் சொல்லுகிறேன், கேளுங்கள். ஹைகோர்ட் ஜட்ஜு சுந்தரமய்யங்காரைத் தெரியுமோ இல்லையோ?... சொல்லும், சுப்பய்யரே! ஹைகோர்ட் ஜட்ஜு சுந்தரமய்யங்காரை உமக்குத் தெரியுமா என்று கேட்கிறேன்...."

"பேஷாகத்தெரியும். ஹைகோர்ட் ஜட்ஜு சுந்தரமய்யங்காரைத் தெரியாமலிருக்குமா?" என்று பெரிய போடாகப்போட்டார் சுப்பய்யர்.

"ஓய்! சுப்பய்யரே! உம்முடைய குட்டு வெளியாகி விட்டது பார்த்தீரா? — சுந்தரம் அய்யங்கார் என்று ஒரு ஹைகோர்ட் ஜட்ஜு எந்தக் காலத்திலும் இருந்தது கிடையாது. நான் சொல்லுகிற ஜட்ஜின் பெயர் வேறு ஒன்று. 'பகலிலே பக்கம் பார்த்துப் பேசு, இராத்திரியிலே அதுவும் பேசாதே' என்று பழமொழி இருக்கிறதோ, இல்லையோ? அதனாலேதான் ஊரைச்சொன்னாலும் பேரைச் சொல்லக் கூடாது என்று அசல் பெயருக்குப் பதிலாக ஒரு புனை பெயரைக் கற்பனை செய்து சொன்னேன். நீரும் ஏமாந்து போனீர்! இருக்கட்டும்; ஹைகோர்ட் ஜட்ஜு சுந்தரமய்யங்கார் ஒரு தர்மப் பள்ளிக்கூடத்துக்கு ஐயாயிரம் ரூபாய் நன்கொடை தருவதாக ஒப்புக் கொண்டார். கையெழுத்தும் போட்டார். பத்திரிகைகளிலே பெயரும் வெளியாகிவிட்டது. ஆசாமி என்ன செய்தார் தெரியுமோ?...நான் சொல்கிறேன், சுப்பய்யரே! நல்ல காரியங்களுக்குப் பணம் கொடுக்காதவன் நீசன்! ஆனால் அவனையாவது ஒருவிதத்தில் சேர்த்துக் கொள்ளலாம். பணங் கொடுப்பதாகக் கையெழுத்துப் போட்டு விட்டுக் கொடுக்காமல் டபாய்க்கிறவன் பெரிய சண்டாளன். அவனையும் போனால் போகிறதென்று சேர்த்துக் கொள்ளலாம். நன்கொடை கொடுப்பதாகக் கையெழுத்துப் போட்டுவிட்டு நல்ல பெயரை வாங்கிக் கொண்ட பிறகு பணத்தைக் கொடுக்காமல் செத்துப் போய் விடுகிறானே, அவன் அதமாதமன்! அவன் இந்த உலகத்தையும் ஏமாற்றி விட்டுச் சொர்க்க லோகத்தையும் ஏமாற்றப் பார்க்கிறான். இந்த ஹைகோர்ட் ஜட்ஜு சுந்தரமய்யங்கார் அந்த மாதிரி செய்து விட்டார். நன்கொடைப் பணத்தைக் கொடுக்

காமல் ஆசாமி வைகுண்டத்துக்கே போய் விட்டார்! கொஞ்ச நாள் கழித்து அவருடைய அருமைப் புதல்வனிடம் மேற்படி நன்கொடை விஷயமாகப் போயிருந்தோம். தகப்பனார் இருபது லட்சம் ரூபாய்க்கு மேல் இந்தப் பையனுக்கு ஆஸ்தி சேர்த்து வைத்து விட்டுப் போயிருக்கிறார். தகப்பனார் கொடுத்த வாக்கைப் பிள்ளையாண்டான் நிறைவேற்றக் கூடாதோ? 'அதெல்லாம் முடியவே முடியாது' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டான். பணம் கேட்கப் போன எங்களுக்கு ஒரே அடியாகக் கோபம் வந்து விட்டது. 'அப்பா! லக்ஷ்மணா! நீ இப்படிக் கண்டிப்பாய்ச் சொல்வதாயிருந்தால் ஒரு ஏற்பாடு செய்கிறோம். '**ஹைகோர்ட் ஸ்ரீ சுந்தரமய்யங்கார் வாக்குப் பரிபாலன நிதி**' என்பதாக ஒரு நிதி ஆரம்பிக்கிறோம். உன் தகப்பனாரிடம் நாங்கள் ரொம்ப மரியாதை உள்ளவர்கள். அவர் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்கு ஏதாவது நாங்கள் முயற்சி செய்தாக வேண்டும்!' என்றோம். அதற்கு அந்தப் பிள்ளையாண்டான் என்ன சொன்னான், தெரியுமா? 'பேஷான ஏற்பாடு! அப்படியே செய்யுங்கள். அதற்கு என்னுடைய பூரண சம்மதத்தையும் அனுமதியையும் கொடுக்கிறேன். ஆனால் ஒரு சமாசாரம். அந்த நிதிக்கு ஐயாயிரம் ரூபாய்க்கு மேலே வசூலானால் அதிகப்படி தொகையை என்னிடம் சேர்ப்பித்து விடவேணும், தெரியுமா? என் தகப்பனாருக்கு நான் ஏக புத்திரன்; வேறு வாரிசு கிடையாது!' என்றான் அந்தக் கருமியின் மகன்! நாங்கள் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு திரும்பினோம். நான் சொல்கிறேன், சுப்பய்யர்வாள்! நிறையப் பணம் சம்பாதித்துத் தானதர்மம் செய்யாமல் அப்படியே பணத்தை வைத்து விட்டுப் போகிறார்களே, அவர்களுக்கெல்லாம் நிறைய மரண வரி போட்டுச் சொத்தைச் சர்க்காரே எடுத்துக் கொள்ள வேண்டும். ஒன்றரை லட்சம் ரூபாய்க்கு மேலே உள்ள சொத்துக்களுக்கெல்லாம் முக்கால் பங்குக்குக் குறையாமல் வரி போட்டுச் சர்க்கார் எடுத்துக் கொண்டு விட வேண்டும்!" என்று சொல்லிச் சாஸ்திரியார் கொஞ்சம் மூச்சுவிட நிறுத்தினார்.

சாஸ்திரியார் கடைசியில் சொன்ன வார்த்தைகளிலிருந்து, அவருக்கு ஒன்றரை லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள சொத்து இருக்கிறது என்று ஊர்ஜிதப்படுத்திக் கொண்ட சுப்பய்யர் அர்த்தபுஷ்டியுடன் கிட்டாவய்யரை ஒரு பார்வை பார்த்தார்.

இதைக் கவனித்த சாஸ்திரியார் உடனே, "அதெல்லாம் இருக்கட்டும், சுப்பய்யர்! யாரையோ நீர் அழைத்து வந்திருக்கிறீர்; நான் வேறு என்னமோ பேசிக்கொண்டிருக்கிறேனே? இவர், யார், சொல்லவில்லையே? பார்த்தால் பெரிய மனுஷராகத் தோன்றுகிறது. காவேரி தீர்த்தம் சாப்பிட்டு வளர்ந்தவர் என்று முகத்திலே எழுதி ஒட்டியிருக்கிறது. உண்டா, இல்லையா?" என்று கேட்டார்.

"முன்னமே தங்களுக்குச் சொல்லியிருந்தேனே, ராஜம்பேட்டை பட்டாமணியம் என்று, அந்தக் கிட்டாவய்யர் தான் இவர்! நேரில் ஒரு தடவை வந்து விட்டுப் போகும்படி கடிதம் எழுதியிருந்தேன். வந்திருக்கிறார்!" என்றார் சுப்பய்யர்.

"சுப்பய்யரே! நன்றாயிருக்கிறது! இவாள் இன்னார் என்று முன்னமே சொல்லியிருக்கக் கூடாதோ? காரியமாக ஒருவரை அழைத்துக் கொண்டு வந்து விட்டு இத்தனை நேரம் வெறும் வம்புப் பேச்சுப் பேசிக் கொண்டிருந்து விட்டீரே! போகட்டும். இவர் தான் ராஜம் பேட்டை பட்டாமணியமோ? நான் சொன்னேனோ பார்த்தீரா? முகத்தில் காவேரி தீர்த்தின் களை பிரகாசிக்கிறது என்று சொன்னேனா இல்லையோ? ரொம்ப சந்தோஷம்! இவர் தான் பட்டாமணியம் கிட்டாவய்யராக்கும்! பட்டாமணியம் உத்தியோகம் மட்டுந்தானா? அதற்கு மேலே நிலம் நீச்சு, கொடுக்கல், வாங்கல் ஏதாவது உண்டோ?"

"எல்லாம் உண்டு; ஐயர்வாளுக்கு அகண்ட காவேரிப் பாசனத்தில் அறுபது ஏக்கரா நன்செய் நிலம் இருக்கிறது; அவ்வளவும் இரு போகம்."

"அப்படியென்றால், இவர் பெரிய பண்ணையார்தான்!...... சுப்பய்யரே!



நான் திருநெல்வேலி ஜில்லாவில் ரொம்ப நாள் உத்தியோகம் பார்த்தவன். சோழ நாட்டில் மிராசுதார் என்று சொல்லுகிறதைத் திருநெல்வேலி ஜில்லாவில் பண்ணையார் என்று சொல்லுகிறார்கள்......ரொம்ப சந்தோஷம். பண்ணையார் இவ்விடம் வந்த காரியம் என்னவோ? பட்டணம் பார்ப்பதற்காக வந்திருக்கிறாரோ?"

"அழகு தான்; பண்ணையார் முன்னமேயே பட்டணம் பார்த்திருக்கிறார். பம்பாய் கூடப் பார்த்திருக்கிறார். இப்போது வந்திருப்பது மாப்பிள்ளை பார்ப்பதற்காக!"

"ஓகோகோ! மாப்பிள்ளை பார்ப்பதற்காக வந்திருக்கிறாரா? பலே பலே! இன்ஷியூரன்ஸ் வேலையோடே இந்த வேலையும் நீர் வைத்துக் கொண்டிருக்கிறீரா? இது வரையில் எத்தனை வீட்டுக்கு அழைத்துப் போனீர்? எத்தனை மாப்பிள்ளைகளைக் காட்டினீர்? இந்த நவநாகரிக காலத்திலே 'மாப்பிள்ளை பீரோ' என்றும் 'கல்யாணக் கம்பெனி' என்றும் ஏற்படுத்தியிருக்கிறார்களாமே? நீரும் அப்படி ஏதாவது கம்பெனி வைத்திருக்கிறீரோ!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை, ஐயர்வாள்! எனக்குத் தெரிந்தது இந்த ஒரே இடந்தான்! நேரே இவ்விடத்துக்குத்தான் இவரை அழைத்து வந்தேன். போன தடவை இந்த விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்த போது தாங்களும் வீட்டிலே அம்மாளும் பெண்ணை அழைத்துக்கொண்டு

வந்து பையனுக்குக் காட்டி விட்டால் தேவலை என்று சொன்னீர்கள்! ஞாபகம் இருக்கிறதல்லவா?"

"ரொம்ப சரி! ஞாபகம் வருகிறது. இரைந்து பேசாதீர். மாடியிலே பையன் இருக்கிறான். அவன் காதிலே விழுந்து வைக்கப் போகிறது!......என்னுடைய அபிப்பிராயம் அதுதான். இந்த விஷயத்திலே நான் கூடக் கொஞ்சம் 'மாடர்ன்' பேர் வழியென்றே வைத்துக் கொள்ளுங்கள். பிள்ளைக்குப் பெண்ணைப் பிடித்திருக்க வேணும்; பெண்ணுக்குப் பிள்ளையைப் பிடித்திருக்க வேணும். அப்புறம் பையனாவது பெண்ணாவது 'இப்படி என்னைக் கெடுத்துவிட்டார்களே!' என்று கேட்பதற்கு இடம் இருக்கக்கூடாது. பெண் கண்ணைப் பிசைந்து கொண்டு நிற்கக் கூடாது. பிள்ளை முகத்தைத் துருத்திக்கொண்டு நிற்கக் கூடாது. சாஸ்திரமும் இதைத்தான் சொல்கிறது. இந்தக் காலத்திலே வரதட்சிணை கிரதட்சிணை என்று சொல்கிறார்களே, அதெல்லாம் சுத்த 'நான்ஸென்ஸ்!' எனக்குப் பிடிக்கிறதேயில்லை. சாஸ்திரத்துக்கு சர்வ விரோதம். நான்கூடப் பையனுக்கு வரதட்சிணை கேட்கிறதாயிருந்தால், 'முப்பதினாயிரத்தைக் கொண்டு வா!' 'ஐம்பதினாயிரத்தைக் கொண்டு வா!' என்று கேட்கலாம். ஒன்றுமில்லாத வறட்டிப் பயல்கள் எல்லாம் இந்தக் காலத்தில் அப்படிக் கேட்கிறார்கள். நம்முடைய யோக்யதைக்கு, அதெல்லாம் சரிக்கட்டி வருமா? என்னுடைய சமாசாரமே ஒரு தனிமாதிரி. எனக்குத் தர்மந்தான் பெரிது; பணம் பெரிதல்ல. இல்லாவிட்டால் இவ்வளவு காலம் உத்தியோகம் பார்த்து விட்டு இப்போது இப்படிக் கடனாளியாக இருப்பேனா? என்னைப் போல உத்தியோகம் பார்த்தவர்கள் இரண்டு கையையும் நீட்டி லஞ்சம் வாங்கி ஒவ்வொருவரும் நாலு வீடு ஐந்து வீடு கட்டி வாடகைக்குவிட்டிருக்கிறார்கள். நான் இந்த ஒரே ஒரு வீடு கட்டியிருக்கிறேன். இதற்கும் கடன் வாங்க வேண்டியிருந்தது. கோ ஆபரேடிவ் சொஸைடிக்குக் கொடுக்க வேண்டிய கடன் இருபதினாயிரம் ரூபாய் இன்னும் கொடுபட வில்லை. யாராவது பெண்ணைக் கொடுக்க வருகிற



வர்கள் அந்தக் கடனை அடைத்து வீட்டை மீட்டால், அவர்களுடைய பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் நல்லதாயிற்று! ஆனால் அது அவர்களுடைய இஷ்டம். என்னைப் பொறுத்த வரையில், வரதட்சணை என்று காலணா கை நீட்டி வாங்க மாட்டேன் ......"

சுப்பய்யர் குறுக்கிட்டு, "ஐயர்வாள்! அதைப் பற்றியெல்லாம் நீங்கள் பேச வேண்டியதேயில்லை. பெண்ணின் கலியாணத்துக்கென்று கிட்டாவய்யர் முப்பதினாயிரம் ரூபாய் எடுத்து வைத்து விட்டார். லௌகிக விஷயங்கள் எல்லாம் ஒரு குறைவும் இல்லாமல் திருப்திகரமாய் நடந்து விடும்......" என்றார்.

"லௌகிகம் கிடக்கட்டும், ஐயா, லௌகிகம்! கல்யாணம் என்பது லௌகிக விஷயமா? பரம வைதிக விஷயம். அக்கினி சாட்சியாக விவாகம் செய்து கொண்ட பிறகுதான் பிராமணனுக்குப் பல வைதிக கிரியைகள் செய்ய உரிமை ஏற்படுகிறது. ஆனால் பிள்ளையையும் பெண்ணையும் கேட்காமல் கலியாணம் நிச்சயம் செய்யும் காலம் போய் விட்டது. பிள்ளைக்குப் பெண்ணைப் பிடித்திருக்க வேண்டும்; பெண்ணுக்குப் பிள்ளையைப் பிடித்திருக்க வேண்டும். அது தான் முக்கியமான விஷயம். ஆமாம்; பண்ணையார் கல்யாணப் பெண்ணையும் அழைத்து வந்திருக்கிறாரோ?..."

இத்தனை நேரமும் வாய் திறக்க வழியில்லாமல் உட்கார்ந்திருந்த கிட்டாவய்யர் இப்போது கொஞ்சம் தைரியம் அடைந்து, "அழைத்து வரலாம் என்றுதான் எண்ணியிருந்தேன். அதற்கு இந்தத் தடவை சௌகரியமில்லாமல் போய்விட்டது. என்னுடைய தங்கை பம்பாயில் இருக்கிறாள். அவளுக்குக் கொஞ்சம் உடம்பு அசௌகரியம் என்று கடிதம் வந்தது, அவளைப் பார்ப்பதற்காகப் பம்பாய் போகிறேன். தாங்கள் சொன்னால், பம்பாயிலிருந்து திரும்பி வந்ததும் கிராமத்துக்குப் போய்க் குழந்தையை அழைத்து வருகிறேன்!" என்றார்.

"அதற்கென்ன, சௌகரியம்போல் செய்யுங்கள்! அவசரம் ஒன்றுமில்லை. இப்போதுதானே தை பிறந்திருக்கிறது? ஆனால் பிள்ளையாண்டானுக்கு மூன்று மாத ரஜாவில் இரண்டு வாரம் தீர்ந்துவிட்டது. ரஜா முடிவதற்குள் கலியாணம் நடந்தாக வேண்டும். அதிகமாய்த் தாமதிக்க இடமில்லை. பையனுடைய தாயார் வேறு ரொம்ப அவசரப் படுகிறாள்!...... கையிலே முப்பது ஜாதகம் வைத்துக் கொண்டிருக்கிறாள். தினம் ஜோசியரை வரவழைப்பதும் பொருத்தம் பார்ப்பதுந் தான் அவளுக்கு இரண்டு மாதமாக வேலை. காமாட்சி! இங்கே கொஞ்சம் வந்துவிட்டுப் போ!" என்று சாஸ்திரிகள் சத்தம் போட்டுக் கூவினார்.

### பத்தாம் அத்தியாயம்

## காமாட்சி அம்மாள்

**வீ**ட்டின் பின் கட்டிலிருந்து "இதோ வந்து விட்டேன்" என்று ஸ்திரீயின் குரல் கேட்டது. சாஸ்திரிகள் "வா! வா! நீ வந்தால் தான் விஷயம் முடிவாகும்!" என்று உரத்துக் கூவினார்.

மறுபடியும் சுப்பய்யரைப் பார்த்து சாஸ்திரிகள் கூறினார்:— "இந்தக் கல்யாண 'டிபார்ட்மெண்'டை நான் அகத்துக்காரியிடமே ஒப்படைத்து விட்டேன். மூத்த பையனுக்குக் கலியாணம் நடந்தபோது எல்லாம் என் ஏற்பாட்டின் படியே நடந்தது. 'இப்படிப்பட்ட பெரிய இடம் கிடைக்க வேண்டுமே!' என்று ரொம்ப சந்தோஷப் பட்டேன். கடைசியில், என்ன ஆயிற்று? மாமனாருடைய ஜோதியில் மாப்பிள்ளை சூன்யமாகிவிட்டான்!...ஊரிலே நாலு பேர் என்ன சொல்கிறார்கள்? என் சம்சாரத்துக்கு நாட்டுப் பெண்ணை வைத்துப் படைக்கத் தெரியவில்லை என்று அவதூறு சொல்கிறார்கள். உண்மையில் காமாட்சியைப்போல் பரம சாதுவை இந்த தேசத்திலே பார்க்க முடியாது. நான் படுத்திய பாட்டை யெல்லாம்

பொறுத்துக்கொண்டு இத்தனை நாள் காலம் தள்ளி யிருக்கிறேனே, இதி லிருந்தே தெரியவில்லையா......?''

"போதுமே! நம்ம வீட்டுக் கதையை யெல்லாம் யாரோ வந்தவர்களிடம் சொல்வானேன்?" என்று கூறிக் கொண்டே அந்தச் சமயம் ஸ்ரீமதி காமாட்சி அம்மாள் அங்கு வந்து சேர்ந்தார். அவரைப் பார்த்தவுடனே, தாரிணியின் கடிதத்தில் அந்த அம் மாளைப்பற்றி வர்ணித்திருந்தது முற் றும் சரியென்று நமக்குத் தோன்றும். நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டும், முகத்தில் சாந்தமும், கண் களில் பிரகாசமும், குடித்தனப் பாங் கான நடை உடை பாவனைகளும் அந்த அம்மாளை நல்ல குடிப்பிறப்புக் கும் தெய்வ பக்திக்கும் இந்து தர்மத் தின் பண்பாட்டுக்கும் சிறந்த பிரதி நிதி என்று தோன்றச் செய்தன.

அந்த அம்மாளைப் பார்த்துச் சுப் பய்யர், "வாருங்கோ, அம்மா! இவ் விடம் 'யாரோ' ஒருவருமில்லை. நான் தான் வந்திருக்கிறேன்! இதோ இந்தப் பிராமணர், நான் சொன்னேனே, அந்த ராஜம் பேட்டைக் கிராம முன்சீப் கிட்டாவய்யர்!" என்றார்.

"ரொம்ப சந்தோஷம்! குழந்தை யையும் அழைத்துக்கொண்டு வந்திருக் கிறாரோ?" என்று காமாட்சி அம்மாள் கேட்டாள்.

"இந்தத் தடவை அழைத்து வர வில்லை. இவருடைய தங்கைக்குப் பம்பாயில் உடம்பு சரியில்லையென்று கடிதம் வந்திருக்கிறது. அதற்காகப் பம்பாய் போகிறார். திரும்பி வந்ததும் தாங்கள் சொன்னால் குழந்தையைக் கூட்டிக் கொண்டு வருவதாகச் சொல் கிறார். ஜாதகம் கொண்டு வந்திருக் கிறார். ஜாதகம் பொருத்தமாயிருந்து மற்ற எல்லா விஷயங்களும் பேசித் திருப்திகரமாக முடிந்து விட்டால், பெண்ணைக் கூட்டிக் கொண்டு வரு வதில் என்ன கஷ்டம் இருக்கப் போகிறது? சென்னைப் பட்டணம் என்ன காடா, பாலை வனமா? நான் ஒருவன் இங்கே இருக்கிறேனே இல்லையோ? குழந்தையைப் பட்ட ணம் பார்ப்பதற்கு என்று அழைத்து வந்தாலும் போச்சு! மற்ற விஷ யங்கள் எல்லாம் பேசி முடித்தால்..."

"மற்ற விஷயம் என்ன, மற்ற விஷயம்?" என்று சாஸ்திரிகள் குறுக்கிட்டார். "ஜாதகம், கீதகம் பார்க்க வேண்டியது கூட அவ்வளவு முக்கியமாகத் தோன்றவில்லை. அதி லெல்லாம் என்ன இருக்கிறது? வேதங்களிலோ சாஸ்திரங்களிலோ ஜாதகம் பார்த்துக் கலியாணம் பண் ணும்படி சொல்லி யிருக்க வில்லை. அதெல்லாம் பின்னால் வந்து சேர்ந்த பிரதிபந்தங்கள். நல்ல குலமா யிருக்க வேணும். கோத்ரம், சகோத்ரமா யிருக்கக் கூடாது! இவருடைய கோத்ரம் என்னவோ!"

"சார்த்தூல கோத்ரம்!"

"நல்ல வேளையாகப் போச்சு! எங்களுடைய கோத்ரம் ஆங்கீரஸம். அதைப் பற்றிக் கவலையில்லை. மற்ற விஷயங்களை யெல்லாம் இவளோடு நீங்கள் பேசிக் கொள்ளலாம்."

"மற்ற விஷயங்கள் பேசுவதற்கு என்ன இருக்கிறது? உங்களுக்கு எது இஷ்டமோ எப்படி இஷ்டமோ அப்படிச் செய்யுங்கள்! பெண்ணை அழைத்துக்கொண்டு வந்து காட்டிப் பையனுக்குப் பிடித்துப் போய் விட்டால், அப்புறம் ஒரு பேச்சும் வேண்டியதில்லை. கல்யாணத்துக்கு முகூர்த்தம் வைக்க வேண்டியது தான்" என்றாள் காமாட்சி அம்மாள்.

இப்படி அவள் சொல்லி வாய்மூடும் சமயத்தில் மேல் மாடியி லிருந்து மச்சுப் படி வழியாக யாரோ இறங்கி வரும் சத்தம் கேட்டது.

இறங்கி வந்தவன் நம் கதாநாயகன் ராகவன் தான். சற்று முன்னால் கவலை யும் வேதனையும் குடிகொண்டிருந்த அவனுடைய முகத்தில் மேற்படி கல் யாணப் பேச்சு, இலேசான புன்ன கையை உண்டாக்கி யிருந்தது.

மச்சுப் படியில் சத்தம் கேட்டதும், இதே பேசிக் கொண்டிருந்த நாலு பேருடைய கண்களும் அந்தப் பக்கம் நோக்கின. இறங்கி வருகிறவன் ராகவன் என்று அறிந்ததும் அவ னுடைய பெற்றோர்களின் நெஞ்சில் சிறிது தயக்கம் உண்டாயிற்று. "ஏதாவது நாம் பிசகாகப் பேசி விட் டோமோ? இதன் காரணமாக ஒரு வேளை உத்தேசித்த காரியம் கெட்டுப்

போய்விடுமோ?'' என்ற கவலை அவர்களுக்கு ஏற்பட்டு விட்டது.

இறங்கி வந்த பையனைக் கிட்டாவய்யர் கண் கொட்டாத ஆர்வத்துடன் பார்த்தார். அவனுடைய கம்பீரமான தோற்றமும் சுந்தரமான முகமும் அந்த முகத்தில் ஒளி வீசிய அறிவின் களையும் கிட்டாவய்யரின் மனதைக் கவர்ந்தன. "இந்தப் பையன் மாப்பிள்ளையாகக் கிடைத்தால் நம்முடைய பாக்கியந்தான்; லலிதா அதிர்ஷ்டசாலிதான்!" என்று அவர் எண்ணிக் கொண்டார்.

ராகவன் கீழ் மச்சுப்படிக்கு வந்து தரையில் இறங்கும் வரையில் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது.

நாலு பேரையும் பொதுப்படையாக ஒரு முறை ராகவன் பார்த்து விட்டு "ஏதோ கல்யாணம் நிச்சயம் செய்து கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறது!'' என்றான்.

"ஏதோ கல்யாணமாவது? உன்னுடைய கல்யாணத்தைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறோம்!'' என்று சாஸ்திரிகள் தைரியமாக ஒரு போடு போட்டார். அன்னியர்களின் முன்னிலையில் ராகவன் மரியாதையாகப் பேசுவான் என்பது அவருக்கு நன்கு தெரிந்த விஷயம்.

தந்தை கூறிய வார்த்தையைக் கேட்டதும் ராகவனுடைய முகம் சிறிதளவு மலர்ந்தது.

"ஓகோ! அப்படியா சமாசாரம்? என்னைக் கேட்காமலே எனக்குக் கல்யாணம் நிச்சயம் செய்துவிடுவதாக உத்தேசமோ?'' என்றான்.

"நன்றாயிருக்கிறது! உன்னைக் கேட்காமல் நிச்சயம் செய்கிறதா? எங்களை என்ன அப்படி நினைத்து விட்டாய், ராகவா?'' என்றார் சாஸ்திரிகள்.

"எல்லாம் உன்னைக் கேட்டுக் கொண்டு உன் அபிப்பிராயப்படி செய்வதாகவே உத்தேசம், குழந்தை! கல்யாணம் என்பது சாதாரண விஷயமா? இன்றைக்குச் செய்து நாளைக்கு மாற்றக் கூடிய காரியமா? உன்னைக் கேட்காமல் தீர்மானிப்பதற்கு நீ என்ன பச்சைக்குழந்தையா?'' என்றாள் காமாட்சி அம்மாள்.

"இந்தக் காலத்திலே பச்சைக் குழந்தையைக் கூடக் கலியாண விஷயத்திலே கட்டாயப் படுத்த முடிகிறதில்லை! பத்து வயதுப் பெண் குழந்தை. 'எனக்கு இந்த ஆம்படையான் வேண்டாம்' என்று துணிச்சலாகச் சொல்கிறது!'' என்றார் சுப்பய்யர்.

இதைக் கேட்டு விட்டு எல்லாரும் சிரித்தார்கள். ராகவனுடைய முகங்கூட இன்னும் சிறிது மலர்ந்தது.

அந்தச் சந்தோஷமான சந்தர்ப்பம் பார்த்துச் சாஸ்திரிகள் கூறியதாவது:

"வெறுமனே சுற்றி வளைத்துக் கொண்டிருப்பானேன்? விஷயத்தைச் சொல்லிவிட்டால் போச்சு! ராகவா! நம்ம சுப்பய்யர் முன்னொரு தடவை சொன்னாரல்லவா? அந்த ராஜம் பேட்டைப் பண்ணையார் இவர்தான். பெண்ணுக்கு வரன் பார்க்க வந்திருக்கிறார். உன்னைக் கூப்பிடலாம் என்று நாங்கள் யோசனை பண்ணிக் கொண்டிருக்கும்போது நீயே வந்துவிட்டாய். உன் அபிப்பிராயத்தைச் சொல்லிவிடு. பாக்கி விஷயம் எல்லாம் 'செட்டில்' ஆகிவிட்டால், பெண்ணை இங்கேயே அழைத்துக் கொண்டு வந்து காட்டுவதாகச் சொல்லுகிறார். நல்ல குலம், நல்ல கோத்திரம், எனக்கும் உன் அம்மாவுக்கும் ரொம்பப் பிடித்தமான சம்பந்தம். ஆனால் எங்களுக்குப் பிடித்திருந்து என்ன பிரயோஜனம்! கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறவன் நீ அல்லவா? பெண்ணை அழைத்துக் கொண்டு வரும்படி சொல்லி அனுப்பலாமா? உன் அபிப்பிராயம் என்னவோ, சொல்லிவிடு! வெறுமனே இவர்களை அலைக்கழிப்பதில் பிரயோஜனமில்லை. உண்டு என்றால் உண்டு என்று சொல்ல வேண்டும்; இல்லை என்றால் இல்லை என்று சொல்லிவிட வேண்டும்.''

ராகவனுடைய முகத்தில் இருந்த புன்னகை மறைந்தது; கடுகடுப்புத் தோன்றியது. தகப்பனார் பேச ஆரம்பித்தவுடன் தலையைக் குனிந்து கொண்டவன் இப்போது தலைநிமிர்ந்து அவரைப் பார்த்தான். "அப்பா! நான் கல்யாணம் செய்து கொள்வதாயிருந்தால் இவர்களுடைய ஊருக்கு நானே போய்ப் பெண்ணைப் பார்த்துக் கொள்கிறேன். இங்கே அழைத்துக் கொண்டு வரவேண்டாம்!'' என்றான்.

(தொடரும்)



ஸ்ரீ நேசமணி பி. ஏ. பி. எல்.
திருவாங்கூர் அரசியல் நிர்ணய சபைத் தமிழர் கட்சித் தலைவர்





# திருவாங்கூர்

**அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்கள்:**

1. ஸ்ரீ ஞானசிகாமணி, பி. ஏ. பி. எல்.
2. ஸ்ரீ ஏ. எலியாஸ்
3. ஸ்ரீ டி. பொன்னையா
4. ஸ்ரீ கே. சிவராமபிள்ளை, பி. ஏ. பி. எல்., அரசியல் நிர்ணய சபைத் தமிழர் கட்சி உப தலைவர்.
5. ஸ்ரீ ஏ. சிதம்பரநாதன், பி. ஏ., பி. எல்.
6. ஸ்ரீ ஏ. கேப்ரியல், பி. ஏ.
7. ஸ்ரீ என். சதாசிவம், பி. எஸ். ஸி. பி. எல்.

**தமிழ்நாடு காங்கிரஸ் நிர்வாகிகள்:**

8. ஸ்ரீ கே. கும்பலிங்கம், காரியக் கமிட்டி அங்கத்தினர்.











# தமிழர் தலைவர்கள்

9. ஸ்ரீ என்.ஏ. நூர்முகம்மது
எம். ஏ. பி. எல். காரியக் கமிட்டி, பார்லிமெண்டரி போர்ட் அங்கத்தினர்.

10. ஸ்ரீ எம். அப்துல் காதர்
நாகர்கோவில் தொண்டர் படை காப்டன்.

11. ஸ்ரீ ஏ. காந்திராமன்,
தமிழ்நாடு காங்கிரஸ் தொண்டர் படைத் தலைவர். 1921-ல் சுசீந்திரம சத்தியாக்கிரகத்தில் கலந்துகொண்டவர்.

12. ஸ்ரீ டி. நாகலிங்கம்,
பி. எஸ். ஸி. தமிழ்நாடு மாணவர் காங்கிரஸ் தலைவர்.

13. ஸ்ரீ கே. நாகலிங்கம்,
தமிழ்நாடு காங்கிரஸ் காரியதரிசி.

14. ஸ்ரீ வி. ஜனார்த்தனன்
காரியக் கமிட்டி அங்கத்தினர்.

●




















# குமரி முனையில் தமிழர் தவம்




சமஸ்தான காங்கிரசின் சூழ்ச்சிக்கும் சமஸ்தான சர்க்காரின் அடக்கு முறைக்கும் ஆளான கிராமங்களைச் சுற்றிப் பார்த்து வருவதற்காக நாகர்கோவிலில் இருந்து நானும் காங்கிரஸ் நிர்வாகிகளில் சிலரும் புறப்பட்டோம்.

அங்கிருந்து சுமார் இருபது மைல் தூரத்தில் இரணியல் என்ற ஊர் இருக்கிறது. சென்ற வருஷம் அவ்விடத்தில் காந்தி ஜெயந்தி வைபவம் நடந்தபோது, சமஸ்தான காங்கிரஸ் தொண்டர்கள் அங்கு இரணிய தர்பார் நடத்தி விட்டார்களாம்!

சமஸ்தான காங்கிரஸ் தொண்டர்கள் தமிழ்நாடு காங்கிரஸ் தொண்டர்களைத் தாக்கியதில், அதாவது பட்டவர்த்தனமாகக் கூறுவதாயின் மலையாளிகள் தமிழர்களைத் தாக்கியதில் பலர் காயமடைந்தனர். தமிழர்களின் கடைகள் தகனமாயின. அங்கு போலீஸ் அதிகாரிகள் இருந்தும்கூட அவர்கள் அந்த அக்கிரமங்களைத் தடுக்கவில்லை. அவ்விஷயமாகத் தமிழ்நாடு காங்கிரஸ் அதிகாரிகள் சமஸ்தான சர்க்காருக்கும் மகாராஜாவுக்கும் அனுப்பிய முறையீடுகள் எல்லாம் செவிடன் காதில் சங்கு ஊதிய கதையாக வியர்த்தமாயின.

இச் சந்தர்ப்பத்தில் இரணியல் என்ற மேற்படி ஊரைப்பற்றி ஒரு வார்த்தை கூற விரும்புகிறேன். இரணியல் என்ற பெயரைக் கேட்டதும் மகாவிஷ்ணுவின் மகா விரோதியான இரணியனுக்கும் இரணியலுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்கலாம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள் அல்லவா? அதுபோலவே நானும் நினைத்தேன். பின்னர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களைப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தபோது, அவ்விஷயத்தைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

"இரணியனுக்கும், இரணியலுக்கும் ஸ்நான சம்பந்தம்கூடக் கிடையாது. ரணசிம்மநல்லூர் என்ற அழகான பெயர் காலக்கிரமத்தில் தேய்ந்து கிழடு தட்டி இன்று இந்த நிலைமைக்கு வந்திருக்கிறது" என்று கவிமணி அவர்கள் சொன்னார்.

'கையில் ஜபமாலை, கக்கத்தில் கன்னக்கோல்' என்பதுபோல, சமஸ்தான காங்கிரஸ் தொண்டர்கள் நேரு, நேதாஜி முதலிய தலைவர்களின் 'பாட்ஜு'களை அணிந்து கொண்டு, ஏழைத் தமிழர்களிடம் தங்களுடைய வீரத்தனத்தைக் காட்டுவது தான் படுமோசமாக இருக்கிறது.

தமிழர்கள் வசிக்கும் பகுதிகளைச் சேர்ந்த பிரம்மபுரம், ஆலங்கோடு, குழிக்கோடு, குழித்துறை, குலசேகரம், டாக்குன்று, சப்பியறை, பாளையம், பாகோடு, இடக்கோடு, சென்னித் தோட்டம், தேமானூர் கரை, மங்காடு, ஆறுதேசம், மார்த்தாண்டம், கீழ்க்குளம் முதலிய பல ஊர்களிலும் சமஸ்தான போலீசாரும், சமஸ்தான காங்கிரஸ் பக்தர்களும் தங்களுடைய கைவரிசையைக் காட்டியதால், ஆங்காங்குள்ள ஜனங்கள் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை, அவற்றில் சில கிராமங்களுக்குச் சென்ற போது நான் நேரில் தெரிந்து கொண்டேன்.

* * *

உயிரற்ற மலைப் பாறைகள் ஆமைகளைப் போன்று தலையை வெளியே நீட்டுவதும் உள்ளே இழுத்துக் கொள்வதுமாக இருக்கும் அதிசயத்தை நீங்கள் எங்கே யாவது பார்த்திருக்கிறீர்களா? மேலே குறிப்பிட்ட கிராமங்களுக்குச் சென்ற போது, ஒன்றிரண்டு பர்லாங் தூரத்துக்கு அப்பாலிருந்த மலைக் குன்றுகளில் நான் அத்தகைய அதிசயத்தைக் கண்டேன். அவ்வழியாகச் சென்றவர்களை அவ்விஷயமாக

விசாரித்தபோது, அந்த 'அதிசயத்து'க்குக் காரணத்தை அவர்கள் விளக்கிக் கூறினர்.

ஆயுதபாணிகளான மலையாளிகள் திடீர் திடீரென்று அந்தப் பிராந்தியத்திலுள்ள கிராமங்களின் மீது படையெடுத்து, ஆடவர்களை அடித்து நொறுக்கி விட்டுச் சென்று விடுவார்களாம். கிராமங்களிலுள்ள கடைகளையும் கொள்ளையடித்துக் கொண்டு போய் விடுவார்களாம். எனவே, கடைகள் எல்லாம் மூடப்பட்டிருக்கின்றன. ஆடவர்களோ வெளியில் பயந்து பகல் முழுதும் மலைக் குன்றுகளில் ஒளிந்துகொண் டிருக்கின்றனர். இரவில் தான் அவர்கள் வீட்டுக்கு வருகின்றனர். மலைப்பாறைகளுக்கு அப்பால் ஒளிந்து கொண்டிருக்கும் அந்தத் துர்ப்பாக்கியசாலிகள்தான், தூரத்தில் மோட்டாரின் சப்தத்தைக் கேட்டதும் மலையாளிகள் தான் வந்து விட்டார்களோ என்று ஒளிந்திருக்கும் இடத்திலிருந்து தலையைத் தூக்கித் தூக்கிப் பார்க்கின்றனர்!

இந்த விவரங்களைக் கேட்ட போது எங்களுடைய மனம் என்னபாடு பட்டிருக்கும் என்பதை அன்பர்கள் ஊகித்துக் கொள்ளலாம்.

வட இந்தியாவில் மலை வாசிகள் கிராமங்களின் மீது படையெடுத்துச் சூறையாடுவது பற்றி நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஹைதராபாத் எல்லையிலும் அடிக்கடி அத்தகைய சம்பவங்கள் நடைபெறுகின்றன.

எனினும், சமஸ்தான காங்கிரஸ் சர்க்கார் அதிகாரத்திலிருக்கும் திருவாங்கூரில் கூட அந்தப் பாழும் படையெடுப்பு பரவியிருப்பது மிகவும் துக்ககரமான விஷயமாகும்.

• • •

நாங்கள் சில கிராமங்களுக்குச் சென்றபோது எங்களுடைய மோட்டாரைக் கண்டதும் பெண்களும் குழந்தைகளும் அலறிக் கொண்டு ஓட முற்பட்டனர். மோட்டாரில் வருவோர் தமிழர்கள் என்று தெரிந்த பின் தான் அவர்களின் திகில் தணிந்தது. அந்தப் பெண்கள் கண்ணீரும் கம்பலையுமாகக் கூறிய விவரங்களைக் கேட்போரின் மனம் நைந்து உருகாமல் இருக்க முடியாது. கிராமங்களிலுள்ள சகல ஆடவர்களும் ஏழை விவசாயிகள். வாழை, வெற்றிலை, மரவள்ளிக் கிழங்கு விவசாயமே அவர்களின் உயிர்நாடி. அப்படியிருக்க, படையெடுப்புகளுக்குப் பயந்து ஆடவர்கள் எல்லோரும் பகலில் மலைகளில் போய் ஒளிந்து கொண்டு விட்டால் விவசாயம் நடப்பது எப்படி? விவசாயம் நடைபெறவில்லையாயின், அவர்கள் ஜீவனம் செய்வது எப்படி?

சிற்சில கிராமங்களில் பெண்களும்கூட ஓடி ஒளிந்து கொண்டிருப்பதால், அவை ஜன சஞ்சாரமற்றப் பிரதேசங்களாகக் காட்சியளிக்கின்றன.

அதிகாரிகள் சில விடங்களில் தமிழர்களுக்கு மாத்திரம் உணவுப் பொருள் ரேஷனை நிறுத்தி யிருக்கிறார்களாம். சுய நிர்ணய உரிமை கோரும் தமிழர்களுக்குச் சரியான 'பாடம்' கற்பிக்க வேண்டும் என்றுதான்!

சில மாதங்களுக்கு முன் திருவாங்கூரில் அரசியல் சீர்திருத்தக் கமிட்டி நியமிக்கப்பட்டதிலிருந்துதான் சமஸ்தான காங்கிரசின் போர்க் கோலம் பகிரங்கமாகியது. அரசியல் நிர்ணய சபைத் தேர்தல் முறையை வகுப்

## கவனிக்க வில்லை!



"என் ஸார், அந்த மனிதர் காரிலேயே இருந்து கொண்டு இறங்குவதும் ஏறுவதுமாகத் தவித்துக்கொண்டிருக்கிறார்?"

"பெரிய மனுஷாள் வீட்டுக் கல்யாணமோ, இல்லையோ! அவர் காரிலே வந்து இறங்குவதை வீட்டுக்காரர் கவனிக்க வேண்டும் என்றுதான்!"

பதற்கு அந்தக் கமிட்டி அமைக்கப்பட்டது. மேற்படி காங்கிரஸ் அதிகாரிகள் அவ்விஷயமாகத் திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸைக் கலந்து கொள்ளவில்லை. அதன் சார்பில் ஒருவரைக்கூட அந்தக் கமிட்டியில் அங்கத்தினராகவும் நியமிக்கவில்லை. பத்து லட்சம் ஜனங்களின் ஏகப்பிரதிநிதி ஸ்தாபனமான திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸை அவர்கள் அலட்சியம் செய்ததை எவ்வளவு கண்டித்தாலும் போதாது.

அதை அலட்சியம் செய்தது மாத்திரமல்ல, அது சர்க்கார் மீது விசுவாசமில்லாத ஸ்தாபனம் என்றும், பொது உடைமை ஸ்தாபனம் என்றும் எதிர்க்கட்சியினர் புகார் கூறவும் தயங்கவில்லை. மகாராஜாவிடம் தங்களுக்கு உள்ள அன்பும் மதிப்பும் விசுவாசமும் மற்றெவருக்கும் குறைந்ததல்ல என்று தமிழ்நாடு காங்கிரஸ் நிர்வாகிகள் வற்புறுத்திக் கூறியும், அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்காமலே சீர்திருத்தக் கமிட்டி அமைக்கப் பட்டது.

மேற்படி கமிட்டியினால் தயாரிக்கப் பட்ட அறிக்கை வெளியாகவில்லை. அதையொட்டித் தங்களுடைய அபிப்பிராயங்களையோ ஆட்சேபணைகளையோ எடுத்துக் கூற ஜனங்களுக்குச் சந்தர்ப்பமும் அளிக்கவில்லை. கமிட்டியின் அறிக்கை சட்டப்படி சர்க்கார் கெஜட்டில் வெளியாக வேண்டும். ஆனால் அது கெஜட்டிலும் வெளியாகவில்லை.

காரியமெல்லாம் பரம ரகசியமாக நடந்து விட்டன! கமிட்டியின் சிபார்சுகளைச் சர்க்கார் அங்கீகரித்து, அதன்படி தேர்தலும் நடக்க உத்தரவு பிறப்பித்து விட்டார்கள்!

அந்தக் கமிட்டியின் முடிவு ஜாதியையும் மதத்தையும் ஆதாரமாகக் கொண்டு, இந்திய தேசிய காங்கிரஸின் அடிப்படைக் கொள்கைக்கே முரணாக இருக்கிறது. எனவே தி. த. கா. காங்கிரஸ், அரசியல் நிர்ணய சபைத் தேர்தலை அடியோடு பகிஷ்கரித்திருந்தால் கூட அது நியாயமானதாக இருந்திருக்கும். எனினும் அவ்வாறு பகிஷ்கரிக்க தமிழ்நாடு காங்கிரஸ் விரும்பவில்லை.

ஏன் தெரியுமா? அந்த காங்கிரஸ் ஜனங்களின் உண்மையான பிரதிநிதி ஸ்தாபனம் அல்லவென்றும், சில சுயநலவாதிகளின் சிருஷ்டி என்றும் சமஸ்தான காங்கிரஸ் செய்து வந்த பிரசாரத்தின் யோக்கியதையை அம்பலமாக்கி விடத்தான்.

அதனாலேயே தமிழ்நாடு காங்கிரஸ் தேர்தலில் கலந்து கொண்டது. சாத்வீகத்துடனும் தைரியத்துடனும் போராடியது. காங்கிரஸ் நிர்வாகிகளிலும் சிலர் போலீஸ் தடியடிக்கு ஆளாக நேர்ந்தது. எனினும் மேற்படி நிர்வாகிகள் சமஸ்தான சர்க்காரின் அடக்கு முறையைக் கண்டு அஞ்சாமல் ஜனங்களுக்கு உண்மை நிலைமையை எடுத்துக் கூறினர். சர்க்காரின் அடக்குமுறை தமிழர்களை அடக்குவதற்குப் பதிலாக, அவர்களிடையேயிருந்த ஆவேசத்தையும் மனக் கொதிப்பையுமே உண்டு பண்ணியது.

தேர்தல் கூட்டங்களில் "திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரசுக்கு ஜே" என்றகோஷம் வானளாவியது. தமிழர் பகுதிகளில் சமஸ்தான காங்கிரஸ் தலைவர்களுக்குக் கறுப்புக் கொடிகளின் வரவேற்பைத்தவிர, வேறெவ்வித ஆதரவும் கிடைக்கவில்லை!

சுய நிர்ணய உரிமை கோரிய தமிழர்களுக்குத் தண்டனையாக நாகர்கோவில் நகர விஸ்தரிப்புத் திட்டத்தைச் சமஸ்தான சர்க்கார் கைவிட்டனர். தமிழர்களின் விவசாயத்தை நாசம் செய்யும் நோக்கத்துடன், பெருஞ்சாணித் திட்டம் என்ற பிரபல அணைக்கட்டுத் திட்டத்தையும் கைவிட்டனர். ரிசர்வ் போலீசாரின் உதவி கொண்டு அதிகாரிகள் தமிழர்களைப் பல விதத்திலும் துன்புறுத்த முற்பட்டார்கள். சில இடங்களில் ஜனங்கள் போலீஸாரின் சித்திரவதைக்கும் உள்ளாக நேர்ந்தது. தமிழ்நாடு காங்கிரஸைச் சேர்ந்தவர்கள் மீது பொய் வழக்குகள் ஜோடிக்கப்பட்டன.

அத்தகைய வழக்குகள் ஒன்றில், பிராசிகியூஷன் தரப்பாரின் கதை வெறும் மடத்தனமானது என்று நாகர்கோவில் செஷன்ஸ் நீதிபதியே கூற நேர்ந்ததென்றால் அந்த வழக்குகளின் யோக்கியதையை ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம்!

• • •

காரியங்களைப் பற்றிக் குறிப்பிடும் போது அவற்றின் கர்த்தாக்களையும் பற்றிக் குறிப்பிடவேண்டும், அல்லவா?

திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸையும் அங்கு தமிழர்கள் நடத்திவரும் போராட்டத்தையும் பற்றிக் கூறும்போது, தன்னலம் கருதாது அந்த இயக்கத்தை நடத்திவரும் தலைவர்களைப் பற்றியும் குறிப்பிட வேண்டியது அவசியமாகும்.

திருவாங்கூர் சமஸ்தானத்திலே மிகப் பிரபல வக்கீலும், அரசியல் நிர்ணய சபையிலுள்ள தமிழர்களின் கட்சித் தலைவருமான ஸ்ரீ எ. நேசமணி, திருவாங்கூர் அசெம்பிளியில் சென்ற இரண்டு வருஷங்களாக அங்கத்தினராய் இருந்திருப்பதுடன், எற்கெனவே நாகர்கோவில் முனிசிபல் தலைவர் பதவியும் வகித்துள்ளார்.

ஸ்ரீ நேசமணி உண்மையில் தமிழர்களின் நேசமணியே! எனவே அரசியல் நிர்ணய சபைத் தேர்தலுக்காகத் தமிழ்நாடு காங்கிரஸ் சார்பில் நின்ற அவர் அமோக வெற்றி பெற்றதில் ஆச்சரியம் எதுவுமில்லை.

சென்ற சில வாரங்களாக ஸ்ரீ நேசமணிக்கு ஓய்ச்சல் ஒழிவின்றி வேலை இருந்து வருகிறது. அவர் செல்வம் திரட்டுவதில் வெகு மும்முரமாக ஈடுபட்டிருக்கிறார். அதாவது தமிழ் நாடு காங்கிரஸைச் சேர்ந்தவர்கள்மீது திருவாங்கூர் சர்க்கார் தொடர்ந்துள்ள அரசியல் வழக்குகளில் தமிழர்களின் சார்பில் ஆஜராகும் பொறுப்பை ஸ்ரீ நேசமணி ஏற்றுக் கொண்டிருக்கிறார். அவர்களில் பெரும்பாலோரும் ஏழைகள். வக்கீல் 'பீஸ்' கொடுக்க முடியாதவர்கள், ஏழைகளுக்காகப் பரிந்துகொண்டு இலவசமாக வாதிக்கும் ஸ்ரீ நேசமணி செல்வம் திரட்டுவதில் ஈடுபட்டிருக்கிறார் என்பது எவ்வாறு பொருந்தும் என்கிறீர்களோ? மகா ஜனங்களின் நல்லெண்ணமும் அபிமானமுமாகிற செல்வத்தைத் தான் குறிப்பிடுகிறேன்.

திருவாங்கூர் தமிழர்களின் நேசமணியைக் கண்டு பேசுவதற்காக நாகர்கோவிலில் இருக்கும் அவருடைய இல்லத்துக்குச் சென்றிருந்தேன். பிரபல வக்கீல் அல்லவா? தமிழர் போராட்டத்தைப் பற்றிய ஆதார பூர்வமான தஸ்தாவேஜுகளை அவர் என் எதிரில் கொண்டு வைத்தார்.

அரசியல் நிர்ணய சபைத் தேர்தலுக்கு முந்தியும் பிந்தியும் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றிக் கூறிக்கொண்டிருந்த ஸ்ரீ நேசமணி, ''சற்று இருங்கள், இதோ வந்து விடுகிறேன்'' என்று சொல்லிவிட்டு எழுந்து உள்ளே சென்றார். ஒன்றிரண்டு நிமிஷம் கழித்து அவர் ஒரு போலீஸ் தடியுடன் கோபமாக வெளியே வரவே, ''இவருக்கு நம் மீது ஏன் இவ்வளவு கோபம்? போலீஸ் உளவாளி என்று நினைத்துவிட்டாரோ?'' என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன்.

ஆனால், ஸ்ரீ நேசமணிக்கு என்மீது கோபம் எதுவுமில்லை; ஏழைகளை அடித்த போலீசார் மீதுதான் கோபம்.

"போலீசார் அடித்ததில் இந்தத் தடி முறிந்துவிட்டதெனில், இதனால் அடிபட்டவர்களின் கதி என்ன என்பதை நீங்களே கற்பனை செய்து சொல்லுங்கள்" என்று அவர் படபடப்புடன் சொன்னார்.

திருவாங்கூர் தமிழர்களின் போராட்டத்தைப் பற்றி ஸ்ரீ நேசமணி கூறிய விவரங்கள் மேற்கொண்டு என்னைத் திடுக்கிடச் செய்தன. திருவாங்கூர் சர்க்காரின் நற்பெயருக்குக் களங்கத்தை உண்டு பண்ணக் கூடிய காரியங்கள் எண்ணிக்கையின்றி நடந்திருப்பதாக ஸ்ரீ நேசமணி வருந்தினார். எனினும், ஒரு விஷயத்தில் அவருக்குச் சந்தோஷம்.

"சமஸ்தான சர்க்கார் இவ்வளவு கடுமையான அடக்குமுறைகளைக் கைக்கொள்ளாவிடில், எங்களை எதிர்த்த அபேட்சகர்களில் மூன்றில் ஒரு மடங்கு பேர் ஜாமீன் தொகைகளை இழக்க நேராமல் இருந்தாலும் இருக்கலாம். வோட்டர்களைப் பயமுறுத்துவதற்காகப் போலீசார் அடக்குமுறையில் இறங்கினர். ஆனால், 'ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்' என்ற கதையாக முடிந்தது. அடக்குமுறையைக் கண்டு அஞ்சுவதற்குப் பதிலாக ஆத்திரம் அடைந்த பெண்மணிகளும் திரள் திரளாகச் சென்று தமிழர் தலைவர்களுக்கு வோட் கொடுத்தனர்."

இவ்விதம் ஸ்ரீ நேசமணி கூறி, தேர்தலுக்குப் பிறகும் போலீசார் செய்துவரும் அட்டூழியங்களை விவரிக்கத் தொடங்கினார்.

திருவாங்கூரிலுள்ள சில கிறிஸ்தவாலயங்களில் கூட, "எல்லோரும் சமஸ்தான காங்கிரசில் சேரவேண்டும்" என்று பாதிரிமார்கள் பிரசாரம் செய்து வருகிறார்களாம்! மேற்படி ஆலயங்களிலுள்ள பிரார்த்தனை மேடைகள் அரசியல் பிரசங்க மேடைகளாக மாறி விடுகின்றன என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. ஸ்ரீ நேசமணியைத் தவிர வேறு யார் அவ்வாறு கூறியிருந்தாலும், நான் அதை நம்பியிருக்க மாட்டேன். ஆனால் ஸ்ரீ நேசமணி தமிழர்களின் தலைசிறந்த தலைவர் என்பதுடன், கிறிஸ்துவாலயக் கமிட்டிகளிலும் பொறுப்பான ஸ்தானம் வகிப்பதால், அவர் அவ்விதம் கூறியதை ஆதாரமற்றது என்று யார்தான் மறுக்கத் துணிவர்? (தொடரும்)

# ஹேமாங்கினி



வேங்கடலக்ஷ்மி

அன்றைய தினம் விமலா பாய்க்குத் தலைகால் தெரியவில்லை. காரணம்; அவளுடைய செல்வமகனான கமலசரணன்—படிப்பதற்காகக் காசிக்குப் போயிருந்தவன்—விடுமுறையில் ஊருக்குத் திரும்பி வருவதாயிருந்ததுதான். இதனால் அன்று பாயிஜியின் சந்தோஷம் பலவிதங்களில் வெளிவந்தது. வீட்டு வேலைக்காரனிடம், “அடே, தினு! சோட்டா பாபு வரப் போகிறாரே, அவருக்குப் பீடா கட்டி வைத்திருக்கிறாயா?” என்று கேட்டாள். அதற்கு அவன் பதில் சொல்லுமுன்பே, தன் மகள் விந்துவைக் கூப்பிட்டு, “ஏ, விந்து! அண்ணாவுக்குப் பீடா கட்டி வைத்திருக்கிறாயா?” என்று கேட்டாள். அவள் பதில் சொல்ல எத்தனிக்கு முன்பு தானே வெற்றிலைப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்து பீடா கட்ட ஆரம்பித்து விட்டாள்!

தாயின் செய்கையைக் கண்டு விந்து கலகலவென்று நகைத்தாள். வேலைக்காரன் தினு பாயிஜியை நோக்கியபடியே தன்னுடைய காவி யேறிய பற்களைத் திறந்து புன்னகை செய்தான்.

பாதி பீடா மடிக்கையிலேயே விமலா பாய்க்குச் சமையலறையில் ‘பண்டிட்’ என்ன செய்கிறானோ வென்ற சந்தேகம் வந்துவிடும். பீடாவைப் பாதியிலேயே விட்டுவிட்டு எழுந்து உள்ளே ஓடுவாள். “ஏ, ரமேச்! பாதம் கீர் ஆறின பிறகு கூலாக ஐஸ் போட்டு வை! வாங்கிபாத்தில் நிறையப் பச்சை மிளகாயைப் போட்டு வைக்காதே! கமலசரணனுக்கு அதிகக் காரம் பிடிக்காது!” என்றெல்லாம் உத்தரவு போட்டுவிட்டு வருவாள்.

இந்தக் காட்சிகளையெல்லாம் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த விந்துவுக்குச் சிரிப்பு பொங்கிக்கொண்டு வந்தது; மாடியில் படித்துக்கொண்டிருந்த தன் அத்தை மகளான ஹேமாங்கினியைக் கூப்பிட்டுக் காண்பித்தாள். பிறகு இருவரும் மறைவாக நின்றுகொண்டு சிரித்தார்கள்.

காலையிலிருந்து வீடு இம்மாதிரி அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. வண்டி வரும் வேளை வந்ததும், “ஹேமா! நீ வேறு புடவை கட்டிக்கொள்ளவில்லையா?” என்று கேட்டாள் விந்து.

தலை குனிந்து படித்துக் கொண்டிருந்த ஹேமா, தலை நிமிர்ந்து விந்துவை நோக்கி, “வேறு புடவையா! எதற்காக?” என்று கேட்டாள்.

விந்துவின் முகம் வியப்பினால் மாறுதல் அடைந்தது. “அண்ணா வருகிறானே! அவன் வரும்போது இந்தப் பழைய புடவையுடனா நீ அவனுக்கு எதிரில் வரப்போகிறாய்?” என்று ஒரு மாதிரியான அதிசயக் குரலில் கேட்டாள்.

ஹேமா மௌனம் சாதித்தாள். சற்றுப் பொறுத்து அவள் நிமிர்ந்து பார்த்த பொழுது அவளுடைய முகம் நிச்சலனமாயிருந்தது. “ஏன், உன் அண்ணா வந்தால் அதற்காக நான் அலங்கரித்துக்கொள்ள வேண்டுமா? எனக்கு இந்தப் புடவையே போதும்!” என்று மிகவும் சாதாரணமான குரலில் சொல்லிவிட்டு, ஹேமா மீண்டும் படிப்பதில் முனைந்தாள்.

விந்துவின் ஆச்சரியம் எல்லை கடந்தது. ஏதோ சொல்ல வாயெடுத்தாள். ஆனால் சட்டென்று தன்னை அடக்கிக்கொண்டாள். இரண்டு தினங்களாகவே ஹேமா ஒரு

மாதிரியா யிருப்பதாக அவளுக்குப் பட்டது. பேசாமல் மாடியிலிருந்து கீழே இறங்கிச் சென்ற அவன், சற்று நேரத்துக் கெல்லாம் திரும்பி வந்து, "ஹேமா, ஹேமா! உன்னை அம்மா கூப்பிடுகிறாள்!" என்று கூவினான்.

இதைக் கேட்டதும் ஹேமாவின் அழகிய முகம் சட்டென்று மாறுபட்டது. அவளுடைய கண்களில் நீர்த்திரை படர்ந்தது. 'மாமி எதற்காக அழைக்கிறாள்' என்பது அவளுக்குத் தெரியும். அவள் நல்லவள் தான். தாயும் தந்தையும் இல்லாத தன்னிடம் அவள் எவ்வளவோ பிரியமாகத் தான் இருக்கிறாள். ஆனால், அன்றைய தினம் கமலசரணனைக் குறித்துப் பேசும் பொழுது அவள் ஏன் அப்படிச் சொல்ல வேண்டும்?—அதை நினைத்துக் கொண்ட பொழுது ஹேமாவின் அழகிய விழிகளில் மீண்டும் நீர் சுரந்தது. சட்டென்று அதைத் துடைத்துக்கொண்டு புஸ்தகத்தை மூடி வைத்துவிட்டு மெதுவாகக் கீழே போனாள்.

"ஹேமா! கமல் வரும் வேளையாச்சே! நீ ஏன் இன்னும் வேறு புடவைகூடக் கட்டிக் கொள்ளவில்லை?" என்று கேட்டாள் மாமி.

"இல்லை மாமி, எனக்குத் தலை வலிக்கிறது......"

"சரிதான், நான்கு நாட்களாக வெய்யில் கொளுத்துகிறதே, இல்லையா! அதனால் உன் உடம்புக்கு ஆகவில்லைபோ லிருக்கிறது. போய்ப் படுத்துக்கொள். கமல் வந்ததும் கூப்பிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, அருகில் வந்து அவளுடைய நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள். பிறகு, "எதற்கும் ஒரு 'ஆஸ்பிரின்' மாத்திரை சாப்பிடுகிறாயா?" என்று கேட்டாள்.

"வேண்டாம், மாமி! சும்மா படுத்துக் கொண்டிருந்தாலே சரியாய்ப் போய்விடும்" என்று கூறிவிட்டு மீண்டும் மாடிக்குப் போய் விட்டாள் ஹேமா.



2

கமலசரணன் பூனாவுக்கு வந்த மூன்றாவது நாள். வாசற் பக்கத்து ஹாலில் உட்கார்ந்து அவன் பத்திரிகை வாசித்துக் கொண்டிருந்தான். அவன் தாயார் வீட்டில் இல்லை. மாருதி கோவிலில் துளசி ராமாயண காலக்ஷேபம் கேட்பதற்குப் போயிருந்தாள். விந்து 'லேடீஸ் கிளப்'பில் 'டென்னிஸ்' ஆடுவதற்குப் போய் விட்டாள். ஹேமா, தனக்கு உடம்பு சரியில்லையென்று வீட்டிலேயே இருந்து விட்டாள்.

கமல் ஊருக்கு வந்ததிலிருந்து அவனுக்கு மனதே சரியாயில்லை. "ஹேமாவுக்கென்ன? அவள் ஏன் இப்படி யிருக்கிறாள்? முன்போல் கலகலப்பாகவே யில்லையே! ஒரு வேளை அம்மா ஏதாவது சொன்னாளோ? அப்படியெல்லாம் அம்மா சொல்லப்பட்டவளல்லவே! பின் ஏன் ஹேமா இம்மாதிரி யிருக்கிறாள்?" என்றெல்லாம் பலவாறாக எண்ணி யெண்ணி அவன் வேதனைப் பட்டான்.

அவன் கையிலிருந்த கடியாரம் ஆறு மணி யானதைக் குறிப்

விட்டது. தீனு வந்து ஸ்விட்சைப் போட்டு விளக்கேற்றினான். அவனைக் கண்டதும், "ஏ, தீனு! ஹேமாக்கினி எங்கே?" என்று கேட்டான் கமலசரணன்.

"தோட்டத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள்!" என்று கூறிய தீனு, அவனை ஒருமாதிரியாகப் பார்த்தான்.

தன் யோசனைகளிலேயே மூழ்கியிருந்த கமலசரணன், அவனைக் கவனியாமலேயே தன் கையிலிருந்த பத்திரிகையை மடித்து வைத்துவிட்டு எழுந்து போய்விட்டான்.

தீனுவின் வாய் திறந்தது. புன்சிரிப்புடன் உள்ளே நின்றுகொண்டிருந்த 'பண்டிட்' ரமேசைப் பார்த்துத் தலையை அசைத்தான்.

* * *

"ஹேமா! என்ன உனக்கு?" என்று கேட்டான் கமலசரணன்.

திடுக்கிட்டுத் திரும்பினாள் ஹேமா. அங்கே கமலசரணனைக் கண்டதும் அவளுக்கு என்னவோ போலிருந்தது. "ஒன்றுமில்லையே! நீங்கள் வெளியே போகவில்லையா?" என்று தயங்கித் தயங்கிக் கேட்டபடியே சற்று விலகி நின்றுகொண்டாள்.

"எனக்கும் ஒரே தலைவலி; எங்கும் போக வேண்டாமென்று இருந்துவிட்டேன். அதிருக்கட்டும், நீ ஏன் என்னிடம் பேசுவதே யில்லை? உனக்கு ஏதாவது என்மீது கோபமா?" என்று கொஞ்சம் குரலில் கேட்டான் கமல்.

ஹேமாவின் முகம் தரையை நோக்கிக் கவிழ்ந்தது. அவள் பதில் சொல்லுவாளென்று நெடுநேரமாக எதிர்பார்த்த கமல் அலுத்துப் போனான்.

"ஹேமா!"

தலை நிமிர்ந்தாள் அவள். அவளுடைய கரு விழிகளினின்றும் மள மள வென்று கண்ணீர் பெருகுவதைக் கண்ட கமலசரணன் பதறிப் போனான்.

"ஹேமா, ஹேமா! ஏன் அழுகிறாய்?" என்று கேட்டவாறு அவன் தன்னை மறந்தவனாய் அவள் அருகில் சென்று அவளுடைய தோளைப் பிடித்தான்.

சர்ப்பம் தீண்டியவள் போல் பின் வாங்கினாள் ஹேமா. அவள் முகம் குபுகுபுவெனச் சிவந்தது.

"நான் உங்களிடம் அதிகமாக நெருங்கிப் பழகக் கூடாதென்று மாமி சொன்னார்கள். ஆகையால்......ஆகையால்......"

அதற்குமேல் அவளால் பேசமுடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது. விம்மி விம்மி அழலானாள்.

இதை அவன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஹேமாவைக் குறித்து அவன் என்னென்னவோ ஆகாயக்கோட்டைகளெல்லாம் கட்டியிருந்தான். அவள் தனக்கே சொந்த



மென்றும், வயது வந்த பின்பு அவளைத் தனக்கு மனைவியாக்கிக் கொள்ளுவதைத் தன் தாயாரே விரும்புவாளென்றும் அவன் எண்ணியிருந்தான். அவை யெல்லாம் சிதைந்து போவதை அவனால் சகிக்க முடியவில்லை. கோபம் பொங்கிவந்தது அவனுக்கு. ஹேமா கண்களைத் துடைத்துக் கொண்டு அவனை நிமிர்ந்து நோக்கினாள். இரத்தம் போல் சிவப்பேறியிருந்த அவன் முகம் அவளுக்குத் திகிலையுண்டாக்கிற்று.

"கமல்!"

"ஏன்?"

"மாமியிடம் இதைக் குறித்துச் சண்டையொன்றும் போட மாட்டீர்களே!" என்று பயத்துடன் கேட்டாள் ஹேமா.

கமலசரணன் உதட்டைக் கடித்துக் கொண்டான்.

"கமல்! இதோ பாருங்கள்; நீங்கள் அப்படியொன்றும் செய்வதில்லை யென்று என்மீது ஆணையாகச் சொல்லுங்கள். மாமியின் மனம் நோகும்படியாக நீங்கள் ஒன்றும் சொல்லக் கூடாது. தாயும் தந்தையும் இல்லாத என்னை எடுத்து வளர்த்து எனக்காக எவ்வளவோ பாடு பட்டிருக்கிறார்கள். அவர்களுடைய மனம் வருந்தும்படியான ஒரு காரியத்துக்கும் நான் இடம் கொடுக்க மாட்டேன். இதுவரை நாம் எண்ணியிருந்தவைகளையெல்லாம் இனிமேல் அடியோடு மறந்துவிட வேண்டும். இன்று முதல் நானும் விந்துவைப் போல உங்களுக்குச் சகோதரி!" என்றாள் ஹேமா.

கமலசரணன் சாந்தமாக, "எனக்கு இரண்டு தங்கைகள் அவசியமில்லை; விந்து ஒருத்தியே போதும்!" என்றான்.

ஹேமா மௌனம் சாதித்தாள். சற்றுப் பொறுத்து, "நான் போகிறேன்" என்றாள்.

கமலசரணன் பேசவேயில்லை. அலட்சியமாக மறுபுறம் திரும்பி நின்றான்.

ஹேமாவுக்கு அழுகை பொங்கி வந்தது. கண்ணீர் பார்வையை மறைக்க வீட்டை நோக்கிப் போகலானாள். அவள் திரும்பிப் பார்க்கவில்லை; பார்த்திருந்தாளானால் கமலசரணனின் கண்களிலும் நீர் ததும்பி வழிந்ததை அவள் கண்டிருப்பாள்.

## 3

"அண்ணா! இன்றைக்கு ரக்ஷாபந்தன்! உன்னுடைய கையைக் காட்டு, இதைக் கட்டுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே, கையில் ஒரு நீளமான சிவப்புக் கயிறுடன் உள்ளே நுழைந்தாள் விந்து. அந்தக் கயிற்றின் இரு நுனிகளிலும் ரோஜாப் புஷ்பங்களும் ஜரிகைக் குஞ்சங்களும் தொங்கின.

புன்சிரிப்புடன் கையை நீட்டினான் கமலசரணன். அதை அவன் கையில் கட்டிவிட்டு அவனுடைய பாத தூளியை எடுத்துச் சிரசில் வைத்துக் கொண்டாள் விந்து. கமலசரணன் கைதூக்கி அவளை ஆசீர்வதித்தான்.

"அண்ணா! வெளியே ஹேமா நின்று கொண்டிருக்கிறாள்; உனக்கு ரக்ஷாபந்தன் செய்ய வேண்டுமாம்; கூப்பிடட்டுமா?" என்று கேட்டாள் விந்து.

கமலசரணனின் முகம் மாறியது. அவளை நோக்கி வெடுவெடுப்புடன், "ரக்ஷாபந்தன் செய்யவேண்டியது சகோதரனுக்கு! நான் அவள் சகோதரனல்லவே!" என்றான்.

விந்து அவன் கோபத்தைக் கண்டு திகைத்து நின்றாள். அறைக்கு வெளியே ஹேமா விம்மி விம்மி அழும் சத்தம் கேட்டது.

கமலசரணன் வெறுப்புடன் ஒரு புஸ்தகத்தை எடுத்துப் பார்க்கலானான். விந்து பயத்துடன் வெளியே போய் விட்டாள்.

மறுநாள் "அம்மா! நான் காலைக்கே கல்கத்தா போகிறேன்!" என்றான் கமலசரணன்.

"என்ன அவசரம், கமல்? பள்ளிக்கூடம் திறப்பதற்கு இன்னும் பதினைந்து நாட்கள் இருக்கின்றனவே!" என்றாள் அவன் தாயார்.

"இல்லை, அம்மா! அங்கே கொஞ்சம் வேலையிருக்கிறது, போகத்தான் வேண்டும்!" என்று கிளம்பிவிட்டான் கமலசரணன். விமலாபாய் எவ்வளவோ சொன்னாள்; அவன் கேட்கவில்லை.

* * *

ஐந்து வருஷங்கள் சென்றன. பூனாவில் கமலசரணனின் வீட்டு வாசலில் 'கமலசரணன், பார்-அட்-லா' என்ற போர்டு தொங்கியது.

அன்று தன்னுடைய பெரிய ஆபீஸ் அறையில் உட்கார்ந்து, ஏதோ காகிதங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான் கமலசரணன்.

நீறு அவசரமாக உள்ளே நுழைந்து, "பாபு! மோட்டாரில் யாரோ ஒரு பாபுவும் பாயியும் வந்திருக்கிறார்கள்!" என்றான்.

கமலசரணன் எழுந்து வெளியே வந்தான். ஹாலில் நின்றுகொண்டிருந்த இருவரையும் கண்டதும் அவன் விழிகள் வியப்பினால் மலர்ந்தன.

"ஹேமா!"

"அண்ணா!"

மலர்ந்த புஷ்பக்கொடிபோல் நின்றிருந்த ஹேமாவைக் கண்ட அவன் மனதில் கடந்த நாட்களின் எண்ணங்கள் அலைகள் போல் குமுறி யெழுந்தன. ஒரு விநாடி அவன் தன்னை மறந்து நின்றான்.

"இவர் பூனாவுக்கு வரவேண்டிய வேலை யிருப்பதாகச் சொன்னார். எனக்கும் உன்னைப் பார்க்க வேண்டும்போ லிருந்தது. நானும் இவருடன் வந்தேன்!" என்று தன் கணவனை நோக்கியபடி சாதாரணமான குரலில் சொன்னாள் ஹேமா.

"அப்படியா? ரொம்ப சந்தோஷம்!" என்று அவரை நோக்கிக் கைகூப்பினான் கமலசரணன். பிறகு ஒரு விநாடி கழித்து, "உள்ளே வாருங்கள்" என்று அவன் அழைத்தான். மூவரும் உள்ளே போய் உட்கார்ந்தார்கள். நீனு எல்லாருக்கும் ஊ கொண்டு வந்து வைத்தாள்.

நாற்புறமும் நோக்கியபடி "மாமி ஊரில் இல்லையென்று சொன்னார்கள்—அது சரி, நீ ஏன் அண்ணா இன்னும் கல்யாணம் செய்து கொள்ளவில்லை? எனக்கு மதனி வரவேண்டாமா?" என்று ஒரு சிறு குழந்தையைப்போல் சிரித்தபடி கேட்டாள் ஹேமாங்கினி.

"நீதான் அம்மா, எனக்கு ஒரு மதனியைக் கண்டுபிடித்துக் கொண்டு வரவேண்டும்!" என்றான் கமல் புன்சிரிப்புடன்.

"அப்படியே செய்கிறேன்" என்று குழிந்த கன்னங்களுடன் கூறிவிட்டு, "அண்ணா! இப்பொழுதாவது உன் கையை நீட்டு; இன்று ரக்ஷாபந்தன்—இதை உன் கையில் கட்டவேண்டும்!" என்று தன் கையிலிருந்த சிவப்புக் கயிற்றை எடுத்தாள் ஹேமா.

அதைப் பார்த்ததும் கமலசரணன் திடுக்கிட்டான். ஒரு விநாடி அவன் விழிகள் அவளை அர்த்தமற்ற பார்வையுடன் நோக்கின. அடுத்த கணம் கனவில் நடப்பவனைப் போல் அவன் தன் கையை நீட்டினான்.

ரோஜாப் புஷ்பங்களுடன் கூடிய அரத்தச் சிவப்பு ரக்ஷையை அவன் கரத்தில் இறுகப் பிணித்தாள் ஹேமா. கமலசரணனின் கரம் லேசாக நடுங்கியது; பிரமை தட்டி நின்றான்.

"நேரமாயிற்று, நாங்கள் போய் வருகிறோம்!" என்றார் ஹேமாவின் கணவர்.

சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டவனாய், "என்ன அவசரம்? இன்றைக்கு ஒரு நாள் இருந்துவிட்டுப் போகக்கூடாதா?" என்றான் கமல்.

"இல்லை யில்லை, எனக்கு ஊரில் கொஞ்சம் அவசர வேலை யிருக்கிறது. இன்றைய ரயிலுக்கே போயாக வேண்டும்" என்றார் அவர்.

ஹேமா கமலசரணனின் பாத தூளியை எடுத்துச் சிரசில் வைத்துக்கொண்டாள். அவன் விழிகளில் கண்ணீர் ததும்பியது. மௌனமாக அவளை ஆசிர்வதித்தான் கமல்.

"போய் வருகிறேன், அண்ணா! இன்னொரு தரம் வரும்பொழுது மதனியை அழைத்துக் கொண்டு வருகிறேன்!" என்று கண்ணைத் துடைத்துக் கொண்டே சிரித்தாள் ஹேமா.

"போய் வருகிறோம்" என்றபடி இருவரும் வண்டியில் ஏறிக்கொண்டார்கள். வண்டி தன் பார்வையிலிருந்து மறையும் வரை அதையே பார்த்தபடி நின்று கொண்டிருந்தான் கமல்.

நெடுநேரம் கழிந்து அறைக்குள் விளக்கேற்ற வந்த நீனு, கமலசரணன் தன் கையிலிருந்த ரக்ஷையைப் பார்த்தபடியே நாற்காலியில் சாய்ந்திருப்பதைக் கண்டு ஓசைப்படாமல் வெளியே போனாள். அவள் கண்களிலும் நீர் ததும்பியது.

---

## வந்தனம்!






### குணம் வேண்டாம்!

கல்யாணத் தரகர்:—நான் சொல்லுகிற பையனுக்கு அந்தச் சோமசுந்தரத்தைப் போல் நிறையப் பணம் இல்லையே தவிர, சகல குணங்களும் இருக்கின்றன. நல்ல லட்சணம்; புத்திசாலி; மனிதர்களின் முகத்தைப் பார்த்தே தெரிந்துகொண்டு விடுவான். கோபம் என்பதே பையனிடம் கிடையாது......

பெண்ணின் தந்தை:—அவன் ஜாதகத்தையும் கொடும். அந்தச் சோமசுந்தரம் என்கிறீர்களே, அந்தப் பையன் ஜாதகத்தையும்தான் கொடுத்துவையுமே!

★

### தெரியுமா?

சிகரெட் பிடித்துக் கொண்டு நின்ற ஒரு வாலிபனை ஒரு பெரியவர் அணுகி, "தம்பி, ஒரு நாளைக்கு எத்தனை சிகரெட் பிடிக்கிறாய்?" என்று கேட்டார்.

"தினம் ஒரு ரூபாய்க்குப் பிடிக்கிறேன்" என்றான் வாலிபன்.

"எத்தனை வருஷமாகவோ?"

"பதினைந்து வருஷமாக......!"

"அடே அப்பா! பார்த்துக் கொள், தம்பி! நீ சிகரெட் பிடித்த பணத்திற்கு அதோ தெரிகிறதே அந்தப் பங்களாவையே விலைக்கு வாங்கியிருக்கலாம், தெரியுமா?"!

"நீங்கள் இப்பொழுது அதை வாங்கியிருக்கிறீர்களா?"

"இல்லை!" என்றார் பெரியவர்.

"நான் அதை வாங்கியிருக்கிறேனே! அது தெரியுமா, உங்களுக்கு!" என்றான் வாலிபன்.

★

### சரிதான்!

நீதிபதி:—நீ திருடுவதற்காக அந்த வீட்டுக்குள் நுழையவில்லை என்கிறாயே, ஏன் சத்தம் செய்யாமல் பூனை போல் நடந்து போனாய்?

கைதி:—வீட்டில் எஜமானனுக்கு உடம்பு அசௌக்கியம் என்று கேள்விப்பட்டேன்!

### சங்கடம் இல்லை!

ஒருவன்:—என் கல்யாண விஷயமாக நான் ஒன்றும் நிச்சயம் செய்ய முடியாமல் இருக்கிறேன். பணக்காரப் பெண்ணைப் பார்த்துச் செய்து கொள்ளுவதா, புத்திசாலியான பெண்ணைப் பார்த்துச் செய்து கொள்ளுவதா என்று தெரியவில்லை.

நண்பன்:—ஏன் உனக்கு இந்தச் சங்கடம்? பணக்காரப் பெண் உனக்குக் கிடைக்க மாட்டாள். புத்திசாலிப் பெண் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டாள்!

★

### உண்மை எப்படி?

வீட்டுக்காரர் (மாடியிலிருந்து இறங்கும் திருடனைப் பார்த்து):—கையில் இருக்கும் மூட்டையைக் கீழே வைத்து விட்டு வெளியே போகிறாயா? இல்லை, போலீஸ்காரனைக் கூப்பிடட்டுமா?

திருடன்:—அட கடவுளே! இதெல்லாம் பக்கத்து வீட்டில் திருடினது, ஐயா!

★

### உபகாரம்!

"அந்த வயற் பக்கத்து நிலத்தை வீடு கட்டுவதற்கு வாங்கினீர்களே, அந்த இடத்தில் இப்போது இடுப்பளவு மழை ஜலம் நிற்கிறதே! நிலத்தை விற்றவனை நீங்கள் அப்புறம் பார்த்தீர்களா?"



"ஆகா, முந்தா நாள் பார்த்தேன்!"

"என்ன சொன்னான்?"

"சொல்வதற்கு என்ன இருக்கிறது? அந்த இடத்துக்குச் சுலபமாய்ப் போய் வருவதற்கு அவனே ஒரு படகையும் விலைக்குக் கொடுத்து விட்டான்!"

# அது என்ன இரகசியம்?

**பட்டு**

இரவு மணி பதினொன்று இருக்கும். வெளியே பனி கொட்டிக் கொண்டிருந்தது. நான் புராண கதா காலட்சேபத்துக்குப் போய்விட்டு விஷ்ணு ஆலயத்திலிருந்து வீட்டுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தேன். அன்று ராமாயணத்தில் மிக்க ரஸமான கட்டம். என் மனம் அதில் லயித்துப் போய் வழி நெடுக அதைப்பற்றியே யோசித்துக் கொண்டு நடந்தேன்.

நிசப்தமான அந்த இரவில், எதிரே ஒரு வீட்டிலிருந்து பேச்சுக் குரல் கேட்டது. அது பிச்சுவின் வீடு. பிச்சு என் ஆத்ம நண்பன். மற்ற வீடுகளில் எல்லோரும் அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்த அந்த வேளையில், அவன் தன் சகதர்மிணியோடு ஏகாந்தமாகப் பேசிக் கொண்டிருந்தான். அவர்கள் பேச்சு என் காதில் ஸ்பஷ்டமாக விழுந்தது.

"உங்களுக்கு இது ரொம்ப நன்றாயிருக்கிறது. உங்களை இப்போ பார்த்தால் அசல் ராஜா மாதிரி இருக்கிறது! கண்ணாடியில் பாருங்கள்!"

"ராஜா மாதிரி என்று சொல்லாதே, ராணி மாதிரி என்று சொல்லு! ராஜா இதெல்லாம் போட்டுக் கொள்வானா?"

அவர்களுடைய சம்பாஷணை என் மனதை அப்படியே கவர்ந்து விட்டது. விஷயம் என்ன?

சற்று நிதானித்தேன். மேற்கொண்டு அவர்கள் பேசியது எதுவும் எனக்குச் சரியாகக் கேட்கவில்லை. எப்படியாவது விஷயத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று எனக்கு ஆவலாக இருந்தது. ஆனால் எந்த வியாஜத்தை வைத்துக் கொண்டு அந்த நேரத்தில் அந்த வீட்டுக் கதவைத் தட்டுவது?

சமய சஞ்சீவிபோல அப்போது நான் கையில் வைத்திருந்த கோவில் துளசி என் நினைவுக்கு வந்தது. உடனே தைரியமாகப் போய்க் கதவைத் தட்டினேன்.



"பிச்சு!"

பிச்சு வந்து கதவைத் திறந்தான்.

"ஏங்கடா! சுந்தரேசா, இந்த வேளையில்?"

"கோவில் பிரஸாதம் கிடைத்தது. அதை உன்னிடம் கொடுத்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்."

பிச்சு மின்சார விளக்கைப் போட்டான். இருவரும் கூடத்தில் ஊஞ்சல் பலகையின் மேல் உட்கார்ந்தோம். பிச்சு ஆரம்பத்திலிருந்தே இரண்டு காதுகளையும் கைகளால் மூடிக்கொண்டிருந்தான். எதற்காக என்று எனக்கு விளங்கவில்லை. ஆனால் நான் கொடுத்த துளசியை வாங்கிக் கொள்ளுவதற்காக அவன் பக்தியோடு இரண்டு கைகளையும் நீட்டிய போது மின்சார விளக்கின் ஒளியில் அவனுடைய முகத்தை உற்றுப் பார்த்தேன். உடனே 'களுக்' என்று எனக்குச் சிரிப்பு உண்டாயிற்று. ஆனால் அதை ரொம்பச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டேன்.

"எங்கே, பெருமான் கோவிலுக்குப் போய்விட்டு வருகிறாயா, சுந்தரேசா?"

"ஆமாண்டா! உனக்குத்தான் வீட்டை விட்டு அசைவதற்கே முடியவில்லையே! புராணிகர் என்ன அற்புதமாகப் பிரசங்கம் பண்ணுகிறார் தெரியுமா!"

"அப்படியா? ரொம்பக் கூட்டமோ?"

"உன்னையும் உன் அகமுடையாளையும் தவிர மற்ற எல்லோரும் கோவிலுக்கு வந்து விட்டார்கள். இன்றைக்குக் கதை கேட்கும்போது உன்னை நினைந்துக் கொண்டேன். அடாடா! ஒரு அஞ்சு நிமிஷம் பொறுமையாகக் கேள். அவர் இன்று சொன்னதன் சாராம்சத்தை உனக்குச் சுருக்கமாகச் சொல்லி விடுகிறேன்" என்று கூறிக்கொண்டே அவனுடைய சம்மதத்திற்காகக் காத்துக் கொண்டிராமல் கதையைச் சொல்ல ஆரம்பித்தேன்:

"ஒரு சமயம் சக்கரவர்த்தித் திருமகனை மந்திரி சுமந்திரர் மிக்க அவசரமாகப் பார்க்க வேண்டியதாக இருந்தது. காலமோ, நான் இப்போது வந்த வேளைமாதிரி இரவு, அகாலம். பிரபு ராமச்சந்திரன் அந்தப்புரத்தில் உன் மாதிரி பிராட்டியாருடன் ஏகாந்தமாயிருந்து கொண்டிருந்தார். சுமந்திரருக்கு அந்தச் சமயம் அந்தப்புரத்துக்குப் போக சங்கோசமாக இருந்தது. இருந்தாலும் சொல்ல வேண்டிய விஷயம்

முக்கியமானதாக இருந்ததால், வேறு வழியின்றி அந்தப்புரத்தை அணுகினார். உள்ளேயிருந்து பேச்சுக் குரல் கேட்டது.

"'பிரபோ, தங்களைப் பார்த்தால் இப்போது எப்படியிருக்கிறது, தெரியுமா? கண்ணாடியில் பாருங்கள்!' என்றார் பிராட்டியார்.

"'அசல் பெண் மாதிரியே இருக்கிறது!' என்று ஆச்சரியத்தோடு கூறினார் ராமச்சந்திர மூர்த்தி......"

இந்தச் சமயத்தில் பிச்சு குறுக்கிட்டான்.

"டேய் சுந்தரேசா, இது என்னடா..."

"உஸ்!......குறுக்கே பேசாதே! கதையைக் கேள்! சுமந்திரர் ஒரு கனைப்புக் கனைத்தார். உடனே ராமச்சந்திரப் பிரபு எழுந்து கதவைத்திறந்து வெளியே வந்து, சுமந்திரரைப் பார்த்து 'என்ன விசேஷம், சுமந்திரரே!' என்று கேட்டார்.

"சுமந்திரர் நிமிர்ந்து பார்த்தார். யார் அது? கம்பருடியவில்லையே! சாக்ஷாத் ராமச்சந்திரன் பெண் உடையில் நின்று கொண்டிருந்தார். பிராட்டியார் அவரை அவ்விதம் அலங்கரித்து அழகு பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தார் போலும்! சுமந்திரருடைய குரலைக் கேட்டதும், அவர் அவசரத்தில் மறந்துபோய் அப்படியே வந்துவிட்டார். சுமந்திரர் பிரமித்துப் போய், காத் தழுதழுக்க 'ராமா!' என்றார்.

"சக்கரவர்த்தித் திருமகன் சுமந்திரருடைய பிரமைக்குக் காரணத்தைக் கணத்தில் உணர்ந்து உள்ளே சென்று, வேஷத்தைக் கலைத்துவிட்டுத் தமது சொந்த உடையுடன் வெளியே வந்தார்!" என்று கூறிக் கதையை முடித்தேன்.

• • •

"டேய், சுந்தரேசா! நான் காதில் இந்தத் தோடு போட்டுக்கொண்டிருக்கிறேன் என்றுதானே என்னைப் பரிகாசம் பண்ணுகிறாய்!" என்றான் பிச்சு.

நான் சிரித்துக்கொண்டே, "அடே, தோடு வேறே போட்டுக்கொண்டிருக்கிறாயா! அப்படிச் சொல்லு! அதுதான் உன் முகம் கொஞ்சம் தெளிவாக இருக்கிறது!" என்றேன்.

"போதும் உன் கேலி! சும்மா வேடிக்கைக்குப் போட்டுப் பார்த்தேன்!"

"சரிதாண்டா, பிச்சு! இதில் தவறு என்ன? சாக்ஷாத் ராமச்சந்திர மூர்த்தியே அப்படி விளையாடினார் என்றால் நாமெல்லாம் எம்மாத்திரம்! இப்போது உன்னைப் பார்த்தால் அசல் ராஜா மாதிரியாகத்தான் இருக்கிறாய்!"

பிச்சு முகத்தில் அசடு வழிய '**ஆடுநன்**' **ராஜா** மாதிரி விழித்தான்.

# மாலதியின் மனோரதம்

சிவகாமு

அவர் வந்து என் அருகில் நின்றது எனக்குத் தெரியாது. "என்ன, மாலதி! இப்படி யோசனையில் ஒரேயடியாக ஆழ்ந்துவிட்டாய்?" என்று அவர் கேட்ட பொழுதுதான் நான் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன்.

"என்ன, சித்தப்பா போட்டோவை அப்படி உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்!" என்று அவர் மீண்டும் கேட்டார்.

"தெய்வசித்தம், ஈசுவர சங்கல்பம்னு சொல்வது எல்லாம் எவ்வளவு உண்மை!"

"என்ன பெரிய வேதாந்தி போலப் புதிர் போடுகிறாயே!"

"யோசித்து யோசித்துப் பார்க்கிறேன். எந்த ஒரு பெரிய மகா சக்தி இப்படி என் வாழ்க்கையின் போக்கைத் திருப்பி யிருக்கக் கூடும் என்று எனக்கு விளங்கவே இல்லை."

"அதுதான் தெய்வ சங்கல்பம்னு சொன்னயே ......"

"அதுமட்டும் இருக்கும்னு நான் நினைக்கவில்லை. அதற்கு மேல் வேறு ஏதோ ஒரு பெரிய மகாசக்தி ......"

"சரி, சரி, எழுந்திரு; எனக்குப் பசிக்கிறது. ஏதாவது பழைய கதையை நினைத்துக் கொண்டு பெரிய வேதாந்தி போலத் தத்துவ விசாரணையில் இறங்கி விடாதே! பிறகு நான் இருக்கிறேன், விஜயம் இருக்கிறான்; ரகு பிறக்கப் போகிறான்......... இவர்கள் கதி என்னவது?"

வாழ்க்கையைப் புதிர் என்று சொல்லாமல் வேறு என்ன வென்று சொல்வது? முன்பின் யோசனை செய்யாதவர்களுடைய இல்லறம் திட்டம் போட்டது போல அழகாக அமைகிறது. பிரமாதமாகத் திட்டம் போட்டுக்கொண்டு கனவு காண்பவர்களுடைய வாழ்க்கையில் பெரிய மாற்றங்களோ ஏமாற்றங்களோ ஏற்படுவதை நம் கண்முன் பலமுறை பார்க்கிறோம்.

விஷயத்துக்கு வருகிறேன். என்னுடைய பெரிய அக்கா ரமாவுக்கு ஆதிகால முதல் உபாத்தியாயினியாக ஆக வேண்டுமென்று ஆசை. அவள் 'கான்வெண்டி'லே படித்தவள். அந்தக் கிறிஸ்தவ மோஸ்தரிலேயே சுயேச்சையாகவும் சுதந்தரமாகவும் வாழவேண்டும் என்று திட்டம் போட்டாள். கொஞ்சம்கூட வெட்கம் இல்லாமல், "நான் கல்யாணம்-கில்யாணம் செய்து கொண்டு, குழந்தை குட்டிகளைப் பெற்று, கட்டிக்கொண்டவனே தெய்வம், - வீடே வைகுண்டம் என்று கிடக்கமாட்டேன்" என்று அடிக்கடி சொல்லுவாள் அதற்கு ஏற்றாற் போல 'லைட் கலர்'லே சித்தாடைகள், ஜாக்கெட்டுகள் வாங்கிக் கொள்ளுவாள். பாட்டி குத்தின மூக்கைத் தூர்த்துவிட்டு கைக்கு ஒரு வளையலும் கழுத்திலே நீளமான ஒரு சங்கிலியும் போட்டுக் கொண்டாள். ஒடிந்து விழும் கொடி போன்ற அவளுடைய தேகத்துக்குத் தகுந்தபடி புடவையைத் தழையத் தழையக் கட்டிக் கொண்டு புறப்பட்டால் திருஷ்டிகூட விழத்தான் செய்யும். யாருடன் பேசினாலும் சரி, மெல்லிய மதுரமான குரலில் முத்து உதிர்வது போல ஒன்றிரண்டு வார்த்தைகளைத்தான் பேசுவாள். விடுமுறை நாட்களில் பக்கத்து வீடுகளில் இருக்கும் குழந்தைகளைக் கூட்டி வைத்துக் கொண்டு 'பள்ளிக்கூடம்' போடுவாள். அப்போதே அவளுக்கு உபாத்தியாயினியாகி விட்டதாக எண்ணம்!

ஆனால், கடைசியில் என்ன நடந்தது? 'எவாகுவேஷ'னுக்காக கிராமத்துக்குப் போயிருந்த போது, எதிர்வீட்டில் இருந்த மிராசுதார் மகனையே கலியாணம்செய்து கொள்ளுவேன் என்று ஒற்றைக் காலால் நின்று அடம் பிடித்து அப்படியே கல்யாணமும் செய்து கொண்டாள். "ஏண்டீ, அந்தப் பிள்ளையாண்டான் 'மெட்ரிகுலேஷன்' பரீட்சைகூடத் தேறவில்லையாமே! சுத்தக் கர்நாடகமா இருக்கான். உனக்கும் அவனுக்கும் சரிக்கட்டி வருமா?" என்று அம்மா எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். கேட்டால்தானே! ஜாதகப் பொருத்தம்கூடப் பார்க்காமல் கலியாணம் நடத்த வேண்டி வந்தது. ஜாதகத்தைப் பார்த்துவிட்டு அப்புறம் பொருத்தம் இல்லாவிட்டால் மனம் சங்கடப்படும் அல்லவா?

இப்பொழுது கூட எனக்கு ஆச்சரியமாக, ஏன்—புதிராகத்தான் இருக்கிறது. 'பாஷன்' 'பாஷன்'னு ஓயாமல் பீற்றிக் கொண்டிருந்த என் சகோதரியின் மன

தைக் கவர்ந்தது என் அத்திம்பேருடைய கட்டுக் குடுமியா, அவருடைய வெள்ளைக் கடுக்கனு அல்லது அவருடைய இனி மூக்கா? எதுவாக இருந்தால் என்ன? ரமாவுக்கு இப்போது நாலாவது கைக் குழந்தை. அவள் சந்தோஷமாகத் தான் குடித்தனம் செய்கிறாள். அவளுடைய இங்கிலீஷ் படிப்பு, நாகரிகம் எல்லாம் போன இடமே தெரியவில்லை!

யாராவது கேலியாக "என்னடி, அப்போது அப்படி எல்லாம் சொல்லிவிட்டு இப்போது இப்படி வாழ்க்கைப்பட்டாயேடி? அப்படித் தான் கலியாணம் பண்ணிக் கொண்டாயே, உன் நாகரிகத்துக்கு ஏற்றபடி ஒரு டாக்டர், வக்கீல்னு யாரையாவது ஒருவரைச் செய்து கொள்ளக் கூடாதா?" என்று கேட்டால், "ஏன் அம்மா, நான் சந்தோஷமாக இருக்கேன்னு உங்களுக்குப் பொறாமையாக இருக்கா?" என்று கேட்டு மடக்கி விடுவாள்!

அது அப்படி யாயிற்று. சின்ன அக்கா சுதா 'டாக்டராகப் போகிறேன்' என்று சொல்லிக் கொண்டே இருந்தாள். அவளுடைய அலங்காரமே ஒரு தனி விதமாக இருக்கும். தலையை இரட்டைப் பின்னலாகப் பின்னி எடுத்துக் கட்டிக் கொள்வாள். கை, கழுத்து, மூக்கு எதிலும் ஒரு நகையைக் கூடப் போட்டுக் கொள்ள மாட்டாள். அவளுடைய இரட்டை நாடி சரீரத்துக்குப் பொருத்தமாக வெள்ளையில் புடவையைக் கட்டிக் கொண்டு, பௌடர் பூச்சுடன், 'டக் டக்' சென்று நடந்து போவாள். அதைப் பார்த்து அம்மா, நாங்கள் - எல்லோருமே மகிழ்ந்தோம். அப்பா அவளைச் செல்லமாக, 'டாக்டர் சுதா!' என்றுதான் கூப்பிடுவார்! அவளுக்கு அப்பொழுதே கழுத்தில் தலை நிற்கவில்லை!

அவள் இஷ்டப்படியே அவளைக் காலேஜில் சேர்த்தார்கள். முதல் வருஷம் முடிவதற்குள் கண்ணுக்குக் கண்ணாடி போட்டுக் கொள்ள வேண்டியதாயிற்று. கண் பரீட்சை செய்து கொள்ளக் கண் டாக்டரிடம் ஏழெட்டுத் தடவை போய் விட்டு வருவதற்குள் அந்த டாக்டரே அவள்மீது கண் வைத்துக் கலியாணம் செய்துகொண்டுவிட்டார்! அவள் டாக்டராக ஆகாவிட்டாலும் 'டாக்டர் மனைவி' என்ற மட்டில் திருப்தி அடைய வேண்டியதாகி விட்டது.

## 2

ஆனால், மற்றவர்களைப் போல நான் பிரமாதமான மனக்கோட்டை எதுவும் கட்டவில்லை. எனக்கு விவரம் தெரிந்தது முதல் என் தாயார், என் அத்தை முதலானவர்களைப் போல நானும் ஒரு கலியாணம் செய்து கொண்டு வீடு, வாசல், மாமி, மாமனார், நாத்தனார் - என்று இந்த மாதிரிப் பிரபஞ்சத்திலே தான் உழல வேண்டுமென்று கனவு கண்டு கொண்டு இருந்தேன். பக்கத்திலோ, தெருவிலோ, எந்தக் கலியாணம் நடந்தாலும் போய் வேடிக்கை பார்ப்பேன். கல்யாண சீர் - செனத்தி, பெண்ணுக்கு எத்தனை ரூபாய்க் கூறைப் புடவை, மாப்பிள்ளைக்கு மோதிரம் எந்தத் தட்டானிடம் செய்யக் கொடுத்தார்கள்—இதை யெல்லாம் அறிந்து கொள்ள மனம் போகும்.

சொல்லிக்கொள்ள வெட்கம் என்ன! எந்தக் கல்யாணத்திலாவது மாப்பிள்ளை நல்ல அழகனாக இருந்தால், 'நமக்கும் இம்மாதிரி மணாளன் கிடைக்கமாட்டானா' என்று என் மனம் ஏங்கும். பொறாமையால் அப்படி ஏங்கி வருந்தவில்லை. அது ஒரு ஆசை. அது மட்டுமா? தெருவில் யாராவது கைக்குழந்தையை — குண்டாட்டமாகக் கொழு கொழு வென்று கையும் காலும் உதறிக் கொள்ள, குறுகுறு வென்ற கண்களுடன் எடுத்துக்கொண்டு போகும்பொழுது அம்மாதிரி ஒரு குழந்தைக்குத் தாயாகக் கூடிய பாக்கியம் விரைவில் கிட்டவேண்டும் என்று கனவு காண்பேன். எந்த மாமியாராவது தன் மாட்டுப் பெண்ணிடம் பிரியமாக இருப்



பதைப் பார்த்தால் அம்மாதிரி ஒரு மாமியார் எனக்கும் வாய்க்க வேண்டும் என்று கடவுளை வேண்டிக் கொள்வேன்.

இந்த கிரகதாகம், இல்லற ஆசையைப் பற்றி நான் வெட்கப்படுவதற்குக் காரணமே இல்லை என்றுதான் என் அந்தராத்மா சொல்லிற்று. நாளும் கிழமையும் கொண்டாடிக்கொண்டு, நோன்புகள் நோற்று, பண்டிகைகளில் பங்கெடுத்துக் கொண்டு, முகத்தில் லக்ஷ்மி கடாட்சம் விகசிக்க, ஊரில் நாலுபேர் 'நல்லவள்' என்று கொண்டாடுவதை விட ஸ்திரீ ஜன்மத்திற்கு வேறு என்ன வேண்டும்?

இந்த நிலைமையில் என் தகப்பனார் ஜாதகக்கட்டை எடுத்துக்கொண்டு எனக்கு வரன் பார்க்க ஆரம்பித்த பொழுதுதான் வாழ்க்கைப் புதிரில் சிக்கல்கள் விழுந்திருப்பது தெரிந்தது. உறியடி உற்சவத்தில், மரத்தில் கட்டியிருக்கும் தயிர்ச்சட்டி கோலுக்கு அருகில் வருவதுபோலக் கீழே இறங்கிவந்து பிறகு தூர விலகுவது போல, விதியும் என் வரன் விஷயத்தில் வரன் முடிவாவதை அருகில் கொண்டுவந்து நிறுத்துவதும் பிறகு விலக்குவதுமாகவே இருந்தது. என் தகப்பனார் வரனைத் தேடிக்கொண்டு புறப்படும்போது இருக்கும் உற்சாகமும், நம்பிக்கையும் அவர் திரும்பி வரும்போது கெட்டு, ஏமாற்றமும் சலிப்புமே மிஞ்சும். ஆம், ஒன்று இருக்கும் இடத்தில் மற்றொன்று இராது. பணம் இருக்கும் இடத்தில் குணம் இராது. குணமிருக்கும் இடத்தில் குலம் கோத்திரம் ஒத்து வராது. எல்லாவற்றையும் மிஞ்சிப்போனால் வரதட்சிணை என்னும் பூதம் விசுவரூபம் எடுக்கும். இப்படித் தாறுமாறுகளெங்கள் குடும்பத்தின் அமைதியைக் குலைத்து வந்தது என் கலியாண விஷயம்.



ஒரு நாள் என் தகப்பனார் மிகுந்த அலுப்பில் "நீயும் ரமா, சுதாவைப் போல ஒரு வாத்தியாரம்மாவாகவோ, டாக்டராகவோ போக ஆசைப்பட்டிருக்க வேண்டும், மாலதி!" என்றார். பெற்ற தகப்பன் வாயில் இத்தகைய வார்த்தைகள் வரவேண்டுமானால் அவர் எனக்காக எவ்வளவு கஷ்டப்பட்டிருக்க வேண்டும்? ஆனால் நான் என்ன செய்வது?

## 3

கடைசியில் இரண்டாம் தாரமாக, இளையாளாக, ஒரு வரன் முடிந்தது. அவருக்கு வயது நாற்பதுக்கும் ஒன்றிரண்டு கூட; ஆனாலும் திடமாகத்தான் இருந்தார். குழந்தை குட்டிகள் இல்லை. காலேஜ் புரொபஸர். தவிர வீடு வாசல், நிலம் நீச்சு எல்லாம் நிறைந்திருந்தது. அவருக்கு நெருங்கிய பந்து அவருடைய அண்ணா ஒருவர் தான். அவருக்கும் இவருக்கும் ஏதோ மனஸ்தாபம், 'நல்லது பொல்லாதது' கூடத் தள்ளி வைத்திருந்தார்கள்.

அப்பா என்னைக் கலந்துகொண்டு பதில் எழுதுவதாக அவரிடம் சொல்லி விட்டு வந்தார். வந்ததும் அம்மாவைக் கேட்டார். அம்மா என் முகத்தைப் பார்த்தாள்.

என் வரையில் நான் அதிகமாகக் கவலைப்படவில்லை.

ஐந்து விரல்களும் ஒன்றாகவா இருக்கின்றன? வயதைப் பார்த்தால் மற்றெல்லாம் எங்கே சரிப்பட்டு வருகிறது? ஆகவே தைரியத்துடன் சம்மதம் அளித்தேன்.

அவர் என்னைப் பார்க்க வந்திருந்தார். அவர் அப்படி வயதானவராகவே தோன்றவில்லை. அவர் என்னுடைய யௌவன வாழ்க்கையைப் பாழாக்கப் போகிறாரே என்ற அருவருப்பு எனக்கு ஏற்படவில்லை. அவரும் திருப்தியுடன் அடுத்த மாதக் கடைசியில் முகூர்த்தம் வைத்துக் கொள்வதாகச் சொல்லி விட்டு விடைபெற்றுக் கொண்டார். அப்பொழுது என் தகப்பனாரிடம் "இப்பொழுதே நான் ஒரு விஷயத்தை மட்டும் சொல்லி விடுகிறேன். எனக்குப் பந்துக்கள் அதிகம் இல்லை; என் அண்ணாவும் அநேகமாகக் கலியாணத்துக்கு வரமாட்டார். என் நண்பர்கள் தான் நாலைந்து பேர் வருவார்கள். கலியாணத்தை எவ்வளவு 'ஸிம்பிளாக' முடிக்கலாமோ அவ்வளவு 'ஸிம்பிளாக' முடியுங்கள்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

இந்த விஷயத்தில் மட்டும் எனக்கு மனக் குறையாகத்தான் இருந்தது. நான்

* * * * * * * * * * * * * * * *

### நம்ப முடியவில்லை!

**பொதுவாக, ருஷ்யாவிடமும் ருஷ்ய மக்களிடமும் ஐரோப்பிய வல்லரசுகளுக்கு ரொம்பக் காலமாகவே சந்தேகம் உண்டு. நூறு வருஷத்துக்கு முன்பு ஐரோப்பாவிலே பிரபலமாக விளங்கிய டாலிரண்ட் என்ற பிரஞ்சு ராஜதந்திரியிடம் யாரோ ஒருவர் சென்று, "ருஷ்ய ஸ்தானிகர் இன்று செத்துப்போய் விட்டார்" என்று சொன்னாராம்.**

**டாலிரண்ட் சற்று நேரம் வரை திகைத்துப் போய் பேசாமல் இருந்தார். பிறகு, "அப்படியா, அவருடைய நோக்கம் என்னவோ தெரியவில்லையே!" என்றாராம்.**

* * * * * * * * * * * * * * * *

கட்டின கோட்டைகள் எங்கே? மாமியார், மாமனார், நாத்தனார், மச்சினன்— என்று என் புக்ககத்துப் பந்துக்கள் பந்தல் நிறைய வந்து உட்கார்ந்தால் கௌரவமாக இருக்குமா, ஏகாங்கியாக வந்து மாலையிடுவது கௌரவமாக இருக்குமா? ஒரு நலுங்கு, ஒரு ஊஞ்சல் இல்லாமல் கல்யாணம் எப்படிச் சோபிக்கும்? ஊரில் நடக்கும் கலியாணங்களில் ஒரு நலுங்கு தப்பாமல் போய் வேடிக்கை பார்த்தவளாச்சே நான்! அந்த நலுங்கு சமயத்தில் சிறு பெண்களும், பழுத்த சுமங்கலிகளுமாகச் சூழ்ந்துகொண்டு கேலி செய்வதையும் சிரித்து விளையாடுவதையும் வாழ்க்கையில் ஒரு பெண் ஒரு தடவை இழந்துவிட்டால் மறுமுறை கிடைக்குமா? அது குறித்து நான் எத்தனை விதவிதமாகக் கனவு கண்டிருப்பேன்! அது வெறும் பகற்கனவாக மாறப்போகிறதே என்ற மனக்குறையை அளவிட்டுச் சொல்ல முடியாது. ஆனால் அதற்காக இப்போது கலியாணத்தை நிறுத்திவிட முடியுமா? நின்றுதான் விடுமா? ஏதோ நமக்குக் கிடைத்த பாக்கியம் அவ்வளவுதான் என்று நான் என்னைச் சமாதானம் செய்து கொண்டேன். எவ்வளவு தான் சமாதானம் செய்து கொண்டாலும் பாழும் மனம் மாத்திரம் திருப்தியடையவில்லை.

## 4

கல்யாணத்திற்கு ஒரு வாரம் இருந்தது. என் இரு தமக்கைகளின் கல்யாணத்தைப் போல இப்போது வீடு அமர்க்களப்படவில்லை. இன்னும் வீடு ஒட்டடை அடித்து வெள்ளைகூடத் திட்டவில்லை! என் அம்மா முதல் எல்லோருக்கும் ஏதோ ஒரு அசிரத்தை இருந்தது.

அன்று வெள்ளிக்கிழமை. அன்று எனக்குக் 'கல்யாணப் பெண்' நடத்தினார்கள். அடுத்த வெள்ளிக்கிழமை என் கழுத்தில் மங்கல நாண் ஏறிவிடும்! அடிமை பந்தமோ, இல்லறச் சங்கிலியோ எதுவோ ஒரு கட்டு என்னைப் பிணைத்து விடும்! அன்று என் தாயார் எனக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து பருப்பும் பாயஸமாக விருந்து வைத்தாள்.

சாப்பிடும் சமயம். அப்போது திடீரென்று வாசலில் யாரோ ஒரு வண்டியிலிருந்து இறங்குவதைப் போல இருந்தது. பார்த்தேன். எனக்கு முடிவான அதே வரன்.

வந்ததும் வராததுமாக அவர் "ஒரு முக்கியமான விஷயத்தை உங்களிடம் சொல்வதற்காக வந்தேன்" என்றார்.

நான் என்னவோ ஏதோ என்று திடுக்கிட்டேன். அதைப்போல அப்பாவும் அம்மாவும் சற்றுக் கலக்கம் அடைந்தார்கள். என் ஹிருதயம் படபட வென்று அடித்துக் கொண்டது.

"ஒரு சந்தோஷமான விஷயத்தைச் சொல்லப் போகிறேன். எனக்கும் என் அண்ணாவுக்கும் இருந்த மனஸ்தாபம் நீங்கிச் சமாதானமாகி விட்டது" என்றார் அவர்.

"மிகவும் சந்தோஷம். அப்படியானால் அவரும் கலியாணத்துக்கு வந்து நன்றாக நடத்தி வைக்க வேண்டும்......" என்றார் என் தகப்பனார், ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே.

"அவர்தான் மணையில் உட்காரப் போகிறார்......"

"அப்படியா, ரொம்ப சந்தோஷம்! இப்பத்தான் என் மனசுக்குத் திருப்தி ஏற்பட்டது. எத்தனை நண்பர்கள் இருந்தாலும், இந்த மாதிரி விஷயங்களுக்கு பந்துக்கள் மாதிரி ஆவார்களா?"

"அவரேதான் தாரை வாங்கிக்கொள்ளப் போகிறார்!"

என்னுடைய அப்பாவுக்கும் அம்மாவுக்கும் உண்டான மகிழ்ச்சி கொஞ்ச நஞ்சம் அல்ல.

"அதுமட்டுமல்ல, ஸார்! உங்க பெண் அவருக்கே மாட்டுப் பெண்ணாகப் போகிறாள்!"

நான் திடுக்கிட்டேன். அப்பாவும் அம்மாவும் விஷயம் விளங்காமல் விழித்தார்கள்.

"உங்கள் பெண்ணை என்னுடைய அண்ணாவின் கடைசிப் பையனுக்குக் கல்யாணம் செய்துகொள்வதாக நாங்கள் தீர்மானித்து விட்டோம்."

அப்பா கண்களில் நீர் ததும்ப "எல்லாம் தெய்வ சங்கல்பம்...நீங்கள் ஏற்றி வைத்த விளக்கு..." என்றார் பூரிப்புடன்.

"பையன் நன்றாகவும் அழகாகவும் இருப்பான். பீ. ஏ., பாஸ் செய்திருக்கிறான்; இன்னும் வயசு இருபதுகூட ஆகவில்லை..."

"நீங்கள் ஒன்றும் சொல்ல வேண்டாம். நீங்கள் எப்படிச் செய்தாலும் சம்மதம்தான்" என்றார் அப்பா.

"நாலு நாள் கல்யாணம். நீங்கள் முதலில் கேட்டுக் கொண்டபடி நடக்கட்டும்..." என்றார் அவர்.

அதே முகூர்த்தத்தில் நான் கட்டியிருந்த மனக்கோட்டையின்படி நான்கு நாட்கள் கல்யாணம் ஜாம் ஜாமென்று நடந்தது. நான்கு நாட்களும் நலுங்கும் ஊஞ்சலுமாக கோலாகலமாக நடந்தது.

* * *

"எழுந்திரு, மாலதி!" என்றார் அவர் மீண்டும்.

"எல்லாக் காரியங்களும் தெய்வ சங்கல்பத்தால் நடக்கின்றன என்பது உண்மைதான். ஆனால் என் விஷயத்தில் உங்கள் சித்தப்பா தான் தெய்வமாக இருந்து என்னைக் காப்பாற்றினார்" என்றேன் நான்.

"உனக்கு மாத்திரமா அவர் தெய்வம்? எனக்கும்தான் அவர் தெய்வம்" என்றார் அவர்.

---

# சங்குவின் சாமர்த்தியம்

**எம். ஆர். ராஜகோபாலன்**

என் நண்பன் சங்கு ஒரு நாள் தலையைத் தடவிக் கொண்டு ரொம்பப் பிரமாதமாக யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

"சங்கு, எந்தக் கோட்டையைப் பிடிக்க யோசனை செய்கிறாய்?" என்று கேட்டேன்.

"இந்த ஊரில் கருமி கந்தசாமி செட்டி என்று ஒருவர் இருக்கிறார். அவருக்குக் 'ஒருபண கோமான்', 'கஞ்சமகாப் பிரபு', 'கருமித்தனத்தின் எல்லைப்புறம்' போன்ற பட்டப் பெயர்கள் ஏகேஷ்டமாக உண்டாம். அந்தக் கந்தசாமியிடம் நம்முடைய வாசகசாலை நிதிக்கு ஒரு காலணாவாவது வாங்கி விடவேண்டும். நீயும் வா, போகலாம் என்றான் சங்கு.

"சரி" என்று சொல்லிவிட்டு நானும் புறப்பட்டேன்.

வழியில் கந்தசாமி 'மாருதி கபே' என்ற ஹோட்டலில் நுழைவதைப் பார்த்தோம். உடனே நாங்களும் அங்கு நுழைந்தோம்.

செட்டியார் யாரும் இல்லாத ஒரு மூலையாகப் பார்த்து உட்கார்ந்து கொண்டு இரண்டு இட்லி சாம்பாருக்கு 'ஆர்டர்' கொடுத்தார். இதற்குள் நாங்களும் அவருக்குப் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டோம்.

சிறிது நேரத்திற்கெல்லாம் சங்கு மெதுவாகச் செட்டியாரைப் பார்த்து, "உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி ஞாபகம்" என்றான்.

"அப்படியா. உங்களை நான் எங்கும் பார்த்ததாக ஞாபகம் இல்லை!" என்றார் செட்டியார். சங்கு ஒரு நிமிஷம் வாயடைத்துப் போனான்.

இதற்குள் செட்டியாருக்கு இட்லி சாம்பார் வந்தது.

அதைப் பார்த்ததும் சங்கு மீண்டும் "இட்லியைத் தவிர நீங்கள் வேறு ஒன்றும் சாப்பிடுவதில்லையா?" என்று கேட்டான்.

"இந்தப் பஞ்ச காலத்திலே அதுகூட எங்கே சரியாகக் கிடைக்கிறது?" என்று சொல்லி விட்டுச் செட்டியார் இட்லியை ஒரு கை பார்க்க ஆரம்பித்தார்.

சங்குவும் இதுதான் சரியான சமயம் என்று நினைத்து "பஞ்ச காலம் என்கிறீர்கள். நமக்குக் கிடைப்பதுகூட எவ்வளவோ பேருக்குக் கிடைப்பதில்லையே! பாருங்கள், பஞ்சால மக்களையும் அவர்கள் படும் துன்பங்களையும்! உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி............!" என்று அடுக்கிக் கொண்டே போனான்.

சங்கு பேச ஆரம்பித்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம் செட்டியாருடைய கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் விழுந்தது. இரண்டு மூன்று தடவை மூக்கைச் சிந்தினார். பிறகு எழுந்து பக்கத்தில் இருந்த குழாயில் கை அலம்பப் போனார்.

சங்கு என்னைப் பார்த்து, "எப்படி நம் கைவரிசை?" என்றான்.

நானும் "என்ன இருந்தாலும் நீ எமன் தாண்டா!" என்றேன்.

செட்டியார் கையை அலம்பிவிட்டு எங்களிடம் வருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். ஆனால் அவர் 'பில்'லை வாங்கிக் கொண்டு நேராகக் 'கவுண்ட'ருக்குப் போய் அங்கு ஏதோ சத்தம் போட்டுப் பேசிக்கொண்டிருந்தார்.



கொஞ்சம் காது கொடுத்துக் கேட்டோம். எங்கள் காதில் விழுந்தது பின்வருமாறு:—

"என்னய்யா, சாம்பாரிலே ஒரே மிளகாயா அள்ளிப் போட்டிருக்கீங்க. தவறிப்போய் ஒண்ணைக் கடித்துவிட்டேன். அது கண்ணிலும் மூக்கிலும் தண்ணியை வரவழைத்து விட்டது" என்றார் செட்டியார். அதற்கு மேல் சங்குவும் நானும் அங்கே நிற்கவில்லை.

# விளையாடுவது யார்?

## எஸ். வி. எஸ்.

வாரத்தில் ஒரு நாள் பட்டப் பகலிலும் தூங்கவேண்டும் என்பதற்காகத் தான் காரியாலயத்தில் ஞாயிற்றுக்கிழமை விடுமுறை கொடுக்கிறார்கள் என்பது என் அபிப்பிராயம். அந்த அபிப்பிராயத்துக் இணங்க சென்ற ஞாயிற்றுக்கிழமை மத்தியானம் பாயை விரித்துப் படுத்துக் கொண்டு, நித்திரா தேவியின் கருணைக்கு ஏங்கிக் கொண்டிருந்தேன். அப்போது என் அறையின் ஒரு மூலையிலிருந்து 'இடி, இடி' என்று சிரிக்கும்சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். குழந்தைகள் ராதாவும் ருக்மணியும் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

குழந்தை ராதாவுக்கு வயது ஏழு இருக்கும்; ருக்மணிக்கு ஆறு இருக்கும். அவர்களைப் பார்த்து, "குழந்தைகளா, இது என்ன சத்தம்? சத்தம் போடாமல் விளையாடுவதானால் இங்கே உட்கார்ந்து விளையாடுங்கள். இல்லையானால், வெளியே போய் விளையாடுங்கள்" என்று படுத்தவாறே சொன்னேன்.

"இல்லை, நாங்கள் சத்தம் போடாமல் விளையாடுகிறோம்!" என்று இரட்டை நாதஸ்வரம்போலச் சேர்ந்து கூறினார்கள் ராதாவும் ருக்மணியும்.

"சரி, சரி, சத்தம் போடாமல் விளையாடினால் சரிதான்!" என்று கூறிவிட்டு நான் நித்திராதேவியின் வழிபாட்டில் மறுபடியும் ஈடுபட்டேன்.

அவர்களைச் 'சத்தம் போடாதே!' என்று தான் சொன்னேனே தவிர, 'குசு குசு' என்று பேச வேண்டாம் என்று நான் சொல்லவில்லையல்லவா? ஆகவே, அவர்கள் 'குசு குசு' என்று பேசினார்கள். அது என் காதில் தெளிவாக விழுந்தது.

"இந்த விளையாட்டு வேண்டாம். நாம் சத்தம் போடாமல் 'சித்தப்பா - சித்தி' விளையாட்டு விளையாடுவோமா?" என்று மெல்லக் கேட்டாள் ராதா.

ருக்மணி "சரி" என்றாள்.

"நான்தான் சித்தப்பாவாம்!" என்றாள் ராதா.

"நான் சித்தப்பாவாக இருக்கிறேனே!" என்று சிணுங்கினாள் ருக்மணி.

"நான்தான் உன்னைவிடப் பெரியவள். வயசிலே பெரியவள்தான் சித்தப்பாவாக இருக்கணும்" என்றாள்.

"சரி" என்று கொஞ்சம் அதிருப்தியுடன் ருக்மணி ஒத்துக்கொண்டாள்.

"நான் தான் சித்தப்பாவாம்; நீதான்..."

"சித்தியாம்!" என்று உற்சாகமாக முடித்தாள் ருக்மணி.

இவ்வளவும் 'குசு குசு' என்று என் முதுகுப்புறம் ராதாவுக்கும் ருக்மணிக்கும் நடந்த சம்பாஷணை. அது அரையும் குறையுமாக என் காதில் விழுந்து கொண்டிருந்ததால் எனக்குத் தூக்கம் சரியாக வரவில்லை. குழந்தைகளைக் கோபித்துக் சொன்னவும் முடியவில்லை. அதனால் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டேன். அவர்கள், சற்று நிறுத்தி, மறுபடியும் சம்பாஷணையைத் தொடர்ந்தார்கள்!

"முதலில் நீ ஆரம்பம் செய்!" என்றாள் ராதா.

சித்தியாக நடிக்கும் ருக்மணி "என்ன சொல்றது?" என்றாள்.




சித்தப்பாவாக நடிக்கும் ராதா சொன்னாள்: "மக்கு, உனக்கு ஒண்ணும் தெரியல்லே! சித்தப்பா — சித்தி சினிமாவுக்குப் போறது விளையாடுவோம்! நீ என்னைக் கேட்கவேணும் 'என்னா! இன்னிக்கு சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போங்களேன்!' என்று. சரி, ஆரம்பி" என்றாள்.

"என்னா! இன்னிக்கு ஒரு சினிமா

வுக்கு அழைச்சிண்டு போங்களேன்'' என்றாள் ருக்மணி.

எனக்கு ஆச்சரியமாகப் போய் விட்டது. அசல் அவளுடைய சித்தியைப் போலவே அல்லவா பேசுகிறாள் ருக்மணி!

"ஆமாம். சினிமாவுமாச்சு! சினிமாவுமாச்சு! வேறே வேலை இல்லையாக்கும்!" என்றாள் ராதா.

"சினிமாவைப் பற்றித்தான் கேட்டிருக்கிறேன்! அதற்கு அழைத்துக் கொண்டு போனால் போதும். நீங்கள் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போக வேண்டாம்" என்றாள் ருக்மணி.

எனக்கு அதிசயம் தாங்கவில்லை.

மறுபடியும் வேறு காட்சி தொடங்கியது.

"அடி! இன்னிக்கு என் சிநேகிதர் ஒருவர் சாப்பிட வரப்போகிறார்!" என்றாள் சித்தப்பாவாக நடிக்கும் ராதா.

"விருந்தாளிக்கு மட்டும் குறைச்சல் இல்லை. ஒரு காய், ஒரு கீரை வாங்கிப் போட மட்டும் அழுகை" என்றாள் சித்தியாக நடிக்கும் ருக்மணி.

"வாங்கிப் போடாத சாமானுக்கு நீ குற்றம் சொல்ல வேண்டாம்! நீ 'கொட்டு' ரஸமாகப் பண்ணிப் போட்டாலும் நானும் என் சிநேகிதரும் சாப்பிடத் தயார்."

"நீங்க சாப்பிடத் தயாராக இருப்பேள். நான் பரிமாறத் தயாராய் இல்லை. அதனாலே, முதல்லே மார்க்கெட்டுக்குப் போய் காய்கறி வாங்கிக்கொண்டு வாங்கோ!"

"நீ எப்பவுமே இப்படித்தான், உபத்திரவம்!" என்று அலுத்துக்கொண்டே 'மார்க்கெட்'டுக்குப் பையைத் தூக்கிக் கொண்டு நடப்பதுபோல் பாவனை செய்தாள் 'சித்தப்பா' ராதா.

'ஏது! ஏது! இந்த நாடகம் பிரமாதமாக இருக்கிறதே!' என்று நான் ரஸித்துக்கொண் டிருந்தபோதே, "இதுதான் பார்வதியாம்!" என்று சொன்னாள் ராதா.

"சரி!" என்றாள் ருக்மணி. நாடகம் மறுபடியும் தொடர்ந்தது.

சித்தப்பாவாக நடிக்கும் ராதா, "ஏண்டி! இப்படிக் குழந்தை பார்வதியை அழ மூட்டு கிறாய்?" என்றாள்.

"ஆமாம்; நான்தான் அழ மூட்டுகிறேனாக்கும்!"

"நீ இல்லாமல் பின்னே யாராம், நானா?" என்றாள் ராதா கோபத்துடன்.

"இல்லை, நான்தான்...... இந்த வீட்டிலே வேறே வேலையில்லை பாருங்கள்! அதனால் குழந்தையை அழ மூட்டி விளையாடுகிறேன், இல்லையா?" என்றாள் ருக்மணி மிடுக்காக.

"உனக்கு வேலையில்லைன்னு யாரும் சொன்னா? விளையாடுகிறாய் என்றுதான் யார் சொன்னா? குழந்தை அழறது, சமாதானப் படுத்து என்றால், என்ன வெல்லாமோ சொல்லுகிறாயே!"

"நீங்க ஆபீசுக்குப் போயிருக்கிற வேளை எல்லாம் நான் குழந்தையை எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறேனே? நீங்க ஆத்திலே இருக்கிற நாழிகையிலாவது கொஞ்சம் குழந்தையைப் பார்த்துக் கொள்ளக் கூடாதா?"

"சரிதான். 'உன்னைக் குழந்தையைச் சமாதானப்படுத்து' என்று சொன்னால், நீ எனக்கே அந்த வேலையை வைக்கிறாயா?"

"அப்படியொன்றும் மனசுக்குக் கஷ்டப் பட்டுக்கொண்டு குழந்தையை எடுத்துக்க வேண்டாம். நான் சொல்வதிலே இருக்கிற நியாய அநியாயத்தை யோசித்துப் பார்த்துப் பண்ணுங்கோ!"

## பம்பாய் அறை!

கிட்டு பம்பாய்க்குப் போய்விட்டு வந்த பிறகு, தான் மற்றவர்களைவிட ஒரு படி உயர்ந்து விட்டதாக நினைத்துக்கொண்டான். யார் எதைப் பற்றிப் பேசினாலும், அவன் நடுவிலே பம்பாயைக் கொண்டு வந்து நுழைக்காமல் விட மாட்டான்.

ஒரு நாள் இரவு அவனுடைய தகப்பனார் தம்முடைய நண்பர் யாருடனோ பேசிக்கொண்டிருந்தார்.

"இன்று இரவு நிலா எவ்வளவு அழகாக இருக்கிறது, பார்த்தீர்களா?" என்றார் அவர் தம்முடைய நண்பரைப் பார்த்து.

அதற்குள் கிட்டு நடுவில் புகுந்து, "இது என்ன நிலா? அடேயப்பா! பம்பாயிலே பார்க்க வேண்டும் நிலாவை! ஆஹாஹா!..." என்றான்.

இதைக்கேட்டு அவனுடைய தகப்பனருக்குக் கோபம் வந்து விட்டது. அவர் கிட்டுவின் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்தார்.



கிட்டு அழுது கொண்டே, "அடேயப்பா, இதெல்லாம் என்ன அறை? பம்பாயிலே யாராவது அறைந்தால், அடேயப்பா!..." என்றான்.

"நீ சொல்றது அத்தனையும் நியாயம். நான் சொல்றதுதான் அநியாயம்—சரிதானே!"

இவ்விதம் குழந்தைகளுக்குள் பேச்சு வார்த்தைகள் முற்றிக்கொண்டே போயிற்று! இவர்கள் எப்படி, எப்போது இந்தச் சம்பாஷணைகளைக் கூர்ந்து கவனித்தார்கள் என்று நான் வியந்து கொண்டிருந்தேன். அப்போது என் தாயார் "தலைக்கு வைத்துக் கொள்ளுகிற மணை எங்கே?" என்று கேட்டுக்கொண்டே வந்தாள்.

"இதோ இருக்கிறது பாட்டி" என்று சொல்லிக்கொண்டே மணையை எடுத்துக் கொண்டு ருக்மணி ஓடினாள்.

நானும் நித்திராதேவியின் வழிபாட்டை விட்டு எழுந்து உட்கார்ந்தேன். ருக்மணியின் கையில் ஒரு மணைக்கட்டை யிருந்தது. அந்த மணைக்கட்டைதான் அவர்கள் நாடகத்தில் குழந்தை பார்வதியின் பாகத்தை வகித்தது என்று அறிந்துகொண்டேன்.

மறுபடியும் அவர்கள் நாடகம் தொடர இருந்தது. அப்போது நான் "ராதா—ருக்மணி! இங்கே வாருங்கள்" என்று கூப்பிட்டேன். இருவரும் என் பக்கத்தில் வந்து அமைதியாக நின்றார்கள்.

நான் "ஏன் ராதா! குழந்தைகள் என்றால் 'அப்பா - அம்மா' விளையாட்டுத்தான் விளையாடுவார்கள். நீங்கள் ஏன், 'அப்பா - அம்மா' விளையாட்டு விளையாடாமல் 'சித்தப்பா-சித்தி' விளையாட்டு விளையாடுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

ராதா "அப்பாவும் அம்மாவும் அவ்வளவு நன்றாக விளையாடுவதில்லை. நீங்கதான் சித்தப்பா நன்றாக விளையாடுகிறீங்கள்" என்றாள்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'என்ன நான் விளையாடுகிறேனா? வாழ்க்கை நடத்துகிறேனா?' என்ற பிரமை எனக்கே உண்டாய்விட்டது.

# மூன்று பிரகஸ்பதிகள்

உலகத்திலே சமாதானம் ஏற்பட வேண்டுமானால், ஒரு தேசத்தில் மாத்திரம் சமாதானம் ஏற்பட்டால் போதாது. உலகத்தில் உள்ள எல்லாத் தேசங்களிலும் சமாதானம் ஏற்பட வேண்டும். எல்லாத் தேசங்களிலும் அமைதி ஏற்பட்டு ஒரே ஒரு தேசத்தில் மாத்திரம் குழப்பமும் யுத்தமும் நடந்து கொண்டிருக்குமானால், அந்தக் குழப்பமும் யுத்தமும் மற்ற நாடுகளை இலகுவில் பாதித்து, விரைவில் உலகம் முழுவதையுமே யுத்தகளமாக்கிவிடும். இதை விளக்குவதற்காக, காலஞ் சென்ற ஹெச். ஜி. வெல்ஸ் என்ற பிரிட்டிஷ் அறிஞர் ஒரு கதை சொல்லுகிறார்:

ஒரு கப்பல் நடுக்கடலில் போய்க் கொண்டிருந்தபோது திடீரென்று மூழ்கிப் போய் விட்டது. அதிலிருந்து நான்கு பேர்கள் மாத்திரம் தப்பிப் பிழைத்து பக்கத்திலிருந்த ஒரு சிறு தீவுக்குப் போனார்கள்.

அந்த நான்கு பேர்களிலே மூவர் வாலிபர்கள்: ஒருவன் சிறு பையன்.

கொஞ்ச காலம்வரை அவர்கள் அந்தத் தீவில் கிடைத்த காய்கனிகளை உண்டு காலங் கழித்து வந்தார்கள். பிறகு அது பிடிக்கவில்லை. ஒருநாள் அவர்கள் கடற்கரை யோரமாகப் போய்க் கொண்டிருந்தபோது, ஒரு காட்டுப் பன்றி அந்தப் பக்கமாகப் போவதைக் கண்டார்கள். உடனே அந்தப் பன்றியை எப்படியாவது பிடித்து, அதைக் கொன்று தின்ன வேண்டுமென்று அவர்களுக்கு ஆசை உண்டாயிற்று.

ஆனால், பன்றியை எப்படிப் பிடிப்பது? இது சம்பந்தமாக அவர்களுக்குள் வாக்குவாதம் உண்டாயிற்று. ஒருவன் "எனக்கு விலா எலும்பு மாத்திரம்தான் வேண்டும்: ஆகையால் நான் விலா எலும்பை மாத்திரம்தான் பிடிப்பேன்" என்றான். மற்றொருவன் "எனக்குக் கால் வேண்டும். ஆகையால், நான் பன்றியின் காலை மாத்திரம்தான் பிடிப்பேன்" என்றான். இன்னொருவன், "எனக்குத் தலைதான் வேண்டும். ஆகையால் நான் தலையைத்தான் பிடிப்பேன்" என்றான்.

சிறுவன் புத்திசாலி. அவன் சொன்னான்: "நீங்கள் நினைப்பதுபோலப் பன்றியைப் பிடிக்க முடியாது. முதலில் எல்லோருமாகச் சேர்ந்து முழுப் பன்றியையும் பிடிப்போம். பிறகு, அவரவர்களுக்கு வேண்டியதை எடுத்துக் கொள்வோம்" என்றான்.

ஆனால், அந்த இளைஞர்கள் அவன் சொன்னதைக் கேட்கவில்லை. "முட்டாள், உன்னை யார் யோசனை கேட்டது? நீ பேசாமல் இரு" என்று சொல்லி விட்டார்கள்.

பிறகு அவர்கள் ஒவ்வொருவரும் தனித் தனியாகப் பன்றியைப் பிடிக்கத் தொடங்கினார்கள். 'கால் வேண்டும்' என்று சொன்னவன், பன்றியின் காலை மாத்திரம் பிடித்தான். பன்றி அவனைக் கடித்துவிட்டு ஓடி விட்டது. 'விலா எலும்பு வேண்டும்' என்று சொன்னவன் விலாவை மாத்திரம் பிடித்தான். பன்றி அவனையும் கடித்துவிட்டு ஓட்டம் பிடித்தது. 'தலை வேண்டும்' என்று சொன்னவன் பன்றியினுடைய தலையை மாத்திரம் பிடித்தான். பன்றி அவனுடைய தலையையே கடித்துவிட்டு ஓடிவிட்டது.

சமாதானம் ஏற்படுவதாயிருந்தால் அது முழு உலக சமாதானமாக இருக்கவேண்டும். பிரான்ஸிலோ, பெல்ஜியத்திலோ, ஸ்விட்ஸர்லாந்திலோ மாத்திரம் சமாதானம் ஏற்பட்டுப் பிரயோஜனம் இல்லை.



# குமுதம்

கௌரவ ஆசிரியர்:

**டாக்டர் அழகப்ப செட்டியார்**

**பிரதி மாதமும் 1வ., 15வ. வெளிவரும்**

**விலை 4 அணா**

குறிப்பிடத்தக்க அம்சங்கள்:

1. இந்திய சரித்திரத்திலிருந்து ஒரு சுவையான காட்சியைச் சித்தரிக்கும் அழகிய மூவர்ண அட்டைப் படம். தமிழ் நாட்டின் நான்கணாப் பத்திரிகைகளில் தொடர்ச்சியாக மூவர்ண அட்டையுடன் பிரசுரமாவது குமுதம் ஒன்றுதான்.

2. 'பாட்டாளி உலகம்' என்ற தலைப்பில் தகுந்த புகைப்படங்களோடு தொழிலாளிகளின் தினசரி வாழ்க்கையைப் பற்றின கட்டுரை.

3. மக்கள் மனத்தைக் கலக்கிக் கொண்டிருக்கும் முக்கியமான பிரச்னைகளைப் பற்றிப் பல பிரமுகர்களுடைய அபிப்பிராயத் தொகுதி. 15-4-48 இதழில் 'யுத்தம் வருமா?' என்ற கேள்விக்கு சபாநாயகர் சிவஷண்முகம் பிள்ளை, நகர மேயர் பூ. கிருஷ்ண ராவ், மேல்சபை எதிர்க்கட்சித் தலைவர் வி. கே. ஜான் இவர்கள் விடையளிக்கிறார்கள். அடுத்த இதழில் — 'சென்னை நகரம் யாருக்குச் சொந்தம்?'

4. உலகப் பிரமுகர்களுடைய வாழ்க்கை வரலாறுகள். அடுத்த இதழில் — ஹென்றி போர்டின் வாழ்க்கை.

5. இரண்டு தொடர் கதைகள்: 1. சந்த்ர ராஜன் எழுதிய 'தெய்வப் பிறவி'. 2. வி. ஸ. காண்டேகர் எழுதிய 'வெண்முகில்' (கா. ஸ்ரீ. ஸ்ரீ. மொழிபெயர்ப்பு)

●

விவரங்களுக்கு:

**குமுதம் காரியாலயம்**

6, ஹண்டர்ஸ் ரோடு :: வேப்பேரி, சென்னை-7




# கோல்கேட்

சுவாசத்தையும் பற்களையும்
சுத்தப்படுத்துகின்றது

உங்களது பற்களை கோல்கேட் முறையால் தினசரி இரண்டு முறை சுத்தம் செய்யுங்கள்.

- பற்களை வெண்மையாகவும் உறுதியாகவும் இருக்கச் செய்கிறது. சொத்தைபல்லைத் தடுக்கிறது.
- ஈறுகளை ஆரோக்ய நிலையிலும் வலுவாகவும் வைக்கிறது. பயோரியாவினின்றும் காப்பாற்றுகிறது.
- வாயை சுத்தமாகவும் புதுமையாகவும் செய்கிறது. துர்நாற்றத்தை அறவே ஒழிக்கிறது.

கோல்கேட் பவுடரோ அல்லது கிரீமோ
உங்கள் இஷ்டப்படி வாங்கிக்கொள்ளலாம்






No. 1.

REGD. No. M. 4392















# ராஜா

ஸ்னோ,
ஹேர் ஆயில்,
கஸ்தூரி ஸோப்.

FAS-10

**MANYAM & CO., BANGALORE – MADRAS – BOMBAY.**

பம்பாய் ஆபீஸ்: 112, குன்டு ரோடு ஸ்ட்ரீட், போர்ட்
மதுரை பிராஞ்சு: 20-A மேலக்கோபுர வீதி, மதுரை